# திருப்போரூர்ச் சந்நிதிமுறை - அலங்காரம்
## ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் அருளியது




உரையாசிரியர்

புலவர். **பா.மாசிலாமணி.** எம்.ஏ.எம்.எட்.


ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் 358ஆம் ஆண்டு
குருபூசைத் திருநாள் 07-06-2017-புதன்கிழமை


நூல்வெளியீடு

ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் வழிபாட்டுச்சங்க
கல்வி அறக்கட்டளை - சென்னை - 63

# ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் திருமடம்

கண்ணகப்பட்டு – திருப்போரூர் – 603 110. காஞ்சிபுரம்.

திருப்போரூர்ச் சந்நிதிமுறை – அலங்காரம் (உரையுடன்)

தவத்திரு. ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் அருளியது

உரையாசியர். **புலவர். பா. மாசிலாமணி** எம்.ஏ.எம்.எட்.,

358 ஆம் ஆண்டு குருபூசைத்திருநாள்

திருவள்ளுவர் ஆண்டு – 2048. ஹேவிளம்பி வைகாசி 24 – விசாகம்

07–06–2017, புதன்கிழமை

**இறைபேரொளியில் கலந்த திருநாள்**

ஆங்கில வருடம் 3–06–1659 – விகாரி வருடம், வைகாசி மாதம் 25

செவ்வாய்க் கிழமை, விசாக நட்சத்திரம் பௌர்ணமி திதி

| | |
|---|---|
| சக ஆண்டு – 1581 | திருவள்ளுவர் ஆண்டு – 1690 |
| கலி ஆண்டு – 4760 | பசலி – 1068 |

நூல் வெளியீடு

**ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் வழிபாட்டுச்சங்க கல்வி அறக்கட்டளை**

13.ஏ. ஏ.எஸ்.இராஜன்நகர், புதுப்பெருங்களத்தூர். சென்னை – 600 063.

தொடர்புக்கு : 99401 92632

# நூல் பற்றிய விவரங்கள்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | திருப்போரூர்ச் சந்நிதிமுறை அலங்காரம் |
| ஆசிரியரின் பெயர் | : | ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள், திருப்போரூர் |
| உரையாசிரியர் | : | புலவர்.பா. மாசிலாமணி எம்.ஏ.எம்.எட்., |
| நூலின் அளவு / தாள் | : | 1/8 |
| பக்கம் | : | 96 |
| படிகம் | : | 1000 |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியிடுவோர் | : | நிறைமதிவழிபாட்டுச்சங்கம் |
| மற்றும் உரிமை | : | ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள்<br>கல்வி அறக்கட்டளை, செம்பாக்கம். |
| பொருள் | : | சைவ சமயம் – அலங்காரம் |
| அச்சுஎழுத்து | : | 12 புள்ளிகள் |
| புத்தகம் கிடைக்குமிடம் | : | பாலு கிராபிக்ஸ், சென்னை–63<br>13 A / A.S. இராஜன் நகர்<br>புதுப்பெருங்களத்தூர், சென்னை – 63<br>தொடர்புக்கு : 99401 92632 |
| விலை | : | ரூ.60/– |
| அச்சிட்டோர் | : | ஓவியா கிராபிக்ஸ், திண்டுக்கல்.<br>போன் : 2430309 |

**திருக்கயிலாய மரபு, திருவண்ணாமலை, துறையூர், திருமுதுகுன்றம் வீரசைவ ஆதீனம், 24-ஆம் பட்டம் சீர்வளர்ச்சீர் இரத்தின வேலாயுத சிவப்பிரகாச பரமாச்சாரியசுவாமிகள் வழங்கிய**

# ஆசியுரை

## திருச்சிற்றம்பலம்

எல்லார்க்கு மேலவன் நீஎன றறிந்துனை ஏத்தியன்பாய்
பொல்லாக் கருமலந் தீர்ந்தான் பொதியப் புகழ்முனிவன்
சொல்லாற் புனைதொங்கல் நக்கீரன் சாத்தித் துனிகடந்தான்
நல்லார்க்கு நல்லவ னேசம ராபுரி நாயகனே – அலங்காரம் (5)

மெய்யன்பர்களே / சமயச்சான்றோர்களே.

அன்பே சிவம்என்பது திருமூலர் அருளிய திருமந்திரம். சைவ சமயம் தொன்மையானது. சமயக்குரவர் நால்வர் பெருமக்கள் தோத்திரப் பாடல்களைப்பாடினர். மெய்கண்ட சந்தானக்குரவர்கள் சாத்திரங்களையருளினர். நமது வீரசைவத் திருமடத்தின் ஞான குரு ஸ்ரீ குமாரதேவரின் முதன்மைச் சீடர்திருப்போரூர் ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள். இவர்கள் தோத்திரப் பாடல்களையும் சாத்திரப் பாடல்களையும் அருளியுள்ளார்கள். திருப்போரூர் ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் சிறந்த தவயோகி. அவர் அருளிய திருப்போரூர்ச் சந்நிதி முறை அனைவராலும் போற்றத்தக்கதாய் அமைந்துள்ளது. இதற்கு செம்பாக்கம் புலவர். பா. மாசிலாமணி அவர்கள் சிறந்த முறையில் உரைவளம் கண்டு எழுதிவருகின்றார். இந்த ஆண்டு (2017) அலங்காரம் எனும் பகுதிக்குச் சிறந்த உரையை எழுதியுள்ளார். "உள்ளக்கவலையெலாம் ஒழிந்தேன்., வள்ளக்கமல மலர் மாது தந்தருள் வாழ்வடைந்தேன்., தெள்ளத் தெளிந்தனன் போரூர் முருகனைச் சேவை செய்தே." பாடல் எண் 51. உரையாசிரியர் தரும் விளக்கம் மிகவும் அருமை. அன்பர்கள் இந்நூலைப் பொருளுணர்ந்து படித்துப் பயன் பெறுமாறு எல்லாம் வல்ல தில்லை நடராசப் பெருமானின் திருவருளையும் ஸ்ரீ குமார தேவரின் குருவருளையும் சிந்திக்கின்றனம். சிவாயநம.

# அணிந்துரை

முனைவர். **சு.தங்கதுரை**
ஆதீனப் புலவர், ஸ்ரீ குமாரதேவர் மடம்,
திருமுதுகுன்றம். பேச : 94867 87745

மெய்யன்பர்களே!

ஒருநூல் உரைபெறுகிறது என்றால் அதன் சிறப்பு உலகம் முழுவதும் பரப்பப்படுகிறது என்று பொருள். அந்த நிலைக்குப் புலவர் பா.மாசிலாமணி தமிழ் கூறும் நல்லுலகத்திற்குப் பல தொண்டுகள் புரிந்துள்ளார். வாழ்த்துகிறோம். செம்பாக்கம் புலவர் பா. மாசிலாமணி அவர்கள் வீரசைவர் சைவ சித்தாந்தத்திலும் கால்பதித்திருப்பவர். அவர் எழுதும் உரைகளில் இந்த இரண்டு கூறுகளும் இழையோடி இருப்பதைக் காணமுடிகிறது.

உரை எழுதும்போது பல நூற்களின் கருத்துக்களை மேற்கோள்காட்டி எழுதுவது உரையின் சிறப்புக்குத்தக்க எடுத்துக்காட்டாகும். புலவர் பா.மாசிலாமணி, சேக்கிழார், அருணாகிரிநாதர், சாந்தலிங்க சுவாமிகள் போன்ற பல அருளாளர்களின் நூற்களை மேற்கோள்காட்டியிருப்பது அவரது பலநூற் பயிற்சியை வெளிப்படுத்துகிறது எனலாம்.

முருகப் பெருமானுக்கும் ஞானசம்பந்தப் பெருமானுக்கும் உள்ள தொடர்பை ஒப்பீட்டுமுறையில் உரையாசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார். திருப்போரூர் முருகப் பெருமாள் மீது பலநூற்கள் பாமாலைகளாகச் சாற்றப்பட்டுள்ளன. சிதம்பரசுவாமிகள் பலநூற்களைப் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று அலங்காரம். அலங்காரம் என்றால் அழகு. முருகப் பெருமானின் சிறப்புகளை அழகுடன் இந்நூலில் சிதம்பரசுவாமிகள் விளக்கியுள்ளார். அவற்றை புலவர் பா. மாசிலாமணி மெருகூட்டும் வண்ணம் விளக்கி இருப்பது அவரது உரைத்திறனை மேம்படுத்துகிறது எனலாம். திருப்போரூர் ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் அவர்களின் வரலாறு மட்டுமல்லாமல் அவரது பல நூற்களுக்கு உரை எழுதியுள்ளார். மேலும் பல நூற்களுக்கு உரைஎழுதி தமிழ் இலக்கிய வரலாற்றில் புதிய பரிணாமத்தை ஏற்படுத்த வேண்டும் என அருள்மிகு பெரியநாயகி உடனுறை அருள்மிகு பழமலைநாதர் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

திருத்தொண்டர்மாமணி
புலவர். **பா.மாசிலாமணி** எம்.ஏ., எம்.எட்., செம்பாக்கம்



ஏது பிழை செய்தாலும் ஏழையேனுக் கிரங்கி
தீதுபுரி யாத தெய்வமே – நீதி
தழைக்கின்ற போரூர் தனிமுதலே நாயேன்
பிழைக்கின்ற வாறு நீ பேசு. --- மாலை

அடியார் பெருமக்கட்குப் பணிவான வணக்கங்கள்.

தொண்டை நாட்டுத் திருத்தலங்களுள் திருப்போரூர் என வழங்கும் சமராபுரி தொன்மையான திருத்தலமாகும். "சமராபுரி வாழ் சண்முகத்தரசே" என தேவராய சுவாமிகள் கூறியுள்ளார். "குன்றுதோறாடல்" எனக்குறிப்பிடும் தலங்களுள் முதன்மையானது. ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் இற்றைக்கு சமார் 400 ஆண்டுகட்கு முன்னர் வீரசைவ நெறியில் வாழ்ந்து இறைபேரொளியில் கலந்தார். காலம் கி.பி. 1659 ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் மீனாட்சி அம்பிகையின் மீது கலிவெண்பாவும் திருப்போரூர் முருகன் மீது பிள்ளைத் தமிழையும் பாடியருளினார். இக்காலத்தில் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழையும் கந்தர்கலிவெண்பாவையும் குமரகுருபரர்பாடியருளினார். அப்பொழுது மதுரையில் திருமலை நாயக்கர் ஆட்சி செய்து வந்தார். காலம் கி.பி.1623....1659. அருணகிரியார் பாடியருளிய கந்தர் அலங்காரம் போன்றே தாமும் அலங்காரம் எனும்இந் நூலையருளியுள்ளார். அன்பர்கள் பொருளுணர்ந்து பாடவேண்டும் எனும் பேரவாவின்காரணமாக "சந்நிதிமுறை" எனுமிந்நூலுக்கு "உரைவளம்" கண்டு எழுதிவருகிறேன். இந்நூல் வெளிவர ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள் விசாக வழிபாட்டுச் சங்கமும் நிறைமதி வழிபாட்டுச்சங்கமும் உறுதுணையாய் உள்ளன. துறையூராதீனம் சீர்வளர்சீர் இரத்தின வேலாயுத பரமாச்சாரிய சுவாமிகள் இந்நூலுக்கு ஆசியுரை வழங்கியுள்ளார். அவர்கட்குமனம் மொழி மெய்களால் எனது பணிவான நன்றி கலந்த வணக்கங்கள். துறையூர் ஆதீனப்புலவர். முனைவர் திரு. தங்கதுரை அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார். அவருக்கும். இந்நூலை நன்முறையில் அச்சிட்டுத் தந்த திண்டுக்கல் ஓவியா கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் எனது நன்றி கலந்த வணக்கங்கள்.

சிவ சிவ.

## திருத்தொண்டர்மாமணி

புலவர். **பா. மாசிலாமணி** எம்.ஏ.எம்.எட் அவர்கள் இயற்றி, இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்.

1. திருப்போரூர் ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் வரலாறு 18–5–2000
2. திருப்போரூர் ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் பதிகம் 4–6–2001
3. திருப்போரூர் ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் போற்றி (108) தமிழில் 2002
4. திருப்போரூர் – திருத்தேர் – எழுகூற்றிருக்கை (இரதபந்தம்) 2010
5. பஞ்சதிகார விளக்கம் – உரையுடன் சைவ சித்தாந்த விளக்கம். 2014
6. ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் சோடச நாமார்ச்சனை (16) வட மொழியில்.
7. திருப்போரூர் தலப்பெருமையும் அருள் ஞான வரலாறும் 2015
8. சிவ பூசை வழிபாட்டு நெறி முறைகள் திருமுறை வழியே விளக்கங்களுடன் 2012
9. விருத்தகிரி – ஸ்ரீ குமாரதேவர் சோடச நாமார்ச்சனை (வட மொழியில்) 2013
10. திருப்போரூர் சந்நிதிமுறை – ஆய்வுக்கட்டுரை பிள்ளைத்தமிழ் 2011
11. திருக்கழுக் குன்றம் வேதகிரீஸ்வரர் பதிகம் – உரையுடன் 11–6–2014
12. பெரியநாயகி அம்மைப் பதிகம். (உரையுடன்) ஸ்ரீ குமார தேவர் அருளியது 14–2–2016
13. ஸ்ரீ குமாரதேவர் அருளிய வேதாகம சிவசமரசவாத அகவல் உரையுடன் துறையூர் ஆதீன வெளியீடு 03–03–2017
14. திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ் (21–5– 2016)

# ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் திருமடம்

## அருள்மிகு கந்தசுவாமிப் பெருமான் திருக்கோயில்,

திருப்போரூர் – 603 110. காஞ்சிபுரம் மாவட்டம்.

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை

### அலங்காரம்

**தவத்திரு. ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள் அருளியது**

உரையாசிரியர் : **புலவர் பா. மாசிலாமணி,** செம்பாக்கம்

தமிழ் இலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐவகைப்படும். அணி – அழகு, அலங்காரம் என்பர் சான்றோர். அணியிலக்கணத்தில் "தண்டியலங்காரம்" மிகச் சிறந்த நூலாகும். அருணகிரிநாதரும் "கந்தர் அலங்காரம்" என்ற நூலை அருளியுள்ளார். தவத்திரு. சிதம்பர சுவாமிகளும் " பா" மலர்களால் கந்தப்பெருமானுக்கு "அலங்காரம்" செய்து மகிழ்கிறார். கட்டளைக் கலித்துறை என்னும் பா வகையைச் சார்ந்தது என்பர் புலவர். "ஐஞ்சீரடி நான்காய் நடப்பது கலித்துறை" – இலக்கணம். அடிதோறும் ஐந்து சீர்களால் அமைந்து நான்கடியாய் அமைந்துள்ளது. எழுத்தெண்ணிப் பாடப்பட்ட நூல். அடிதோறும் மெய்யெழுத்துக்களை நீக்கினால் ஏனைய எழுத்துக்கள் ஒரே சீராக அமைந்துள்ளன. (உ–ம்) முதலடியில் 16 எழுத்துக்கள்வரின் ஏனைய அடிகளிலும் 16 எழுத்துக்கள் மிகாமல் பாடல்கள் அமைந்துள்ளன. முதற்சீர் நான்கும் வெண்டளை தவறாமல், ஈற்றுச்சீர் மூவசையாக நீண்டு விளங்காயாக அமையும். இது இந்நூலின் இலக்கணச் சிறப்பு. இந்நூலில் காப்புச் செய்யுள் நீங்கலாக 101 செய்யுள் அமைந்துள்ளன.

"காப்புச்செய்யுள்"

"முக்கட் பவள மலைவந்த தேனை முராரிதங்கைப்
பக்கத் தெடுக்கும் பரிமளப் பூவைப் பருமயிலோற்
கொக்கத் துணைவந்த உத்தம தேவை உயர்பொருளைச்
செக்கச் சிவந்தநன் மால்யானை யைச்சிந்தை சேர்க்குதுமே

## கருத்துரை

மூன்று கண்களையும் பவளம் போன்ற நிறத்தினையும் உடைய மலை போன்ற சிவபெருமானை வலமாக வந்த தேன் போன்றவனை, திருமாலின் தங்கையாம் பார்வதிதேவியே தமது இடையில் எடுத்து வளர்க்கும் நறுமணமிக்க மலர் போன்றவனை, பருத்த மயிலை வாகனமாக உடைய முருகப் பெருமானுக்குத் துணையாக ஒருசேர எழுந்தருளிய உத்தமனை, கணங்கட்கெல்லாம் தலைவனாக உடையவனை, உயர்ந்த பொருளாக விளங்குபவனை, மிகுதியான சிவந்த நிறத்தையும், நன்மையையும் தரும் பெரிய யானை போன்ற வடிவினை உடையவனை சிந்தையில் வைத்து வழிபடுவோமாக !

## அரும்பதவுரை

முராரி – திருமால். பரிமளப்பூ – நறுமணமிக்க மலர். செக்கச் சிவந்த நன்மால் யானை – விநாயகரது வடிவம். வெள்ளை நிற யானை – ஐராவதம். இந்திரனுக்குரியது. புத்தி – புந்தி, அறிவு. புத்தியில் உறைபவர் – சிந்தையில் வைத்து வழிபடுதல். மலை (வலம்) வந்த – வலம் என்பது இடைப்பிறவரல்.

## விளக்கவுரை

தேனை, பூவை, தேவை, யானையைச் சிந்தை சேர்க்குதும் எனப்பொருள் காண்க. ஏனைய கடவுளர்கட்கெல்லாம் மூன்று கண்கள் உடையனவாயினும் சிவபெருமானையே குறித்தலின் "முக்கட்" என்றார். திருப்புகழில் அருணகிரி நாதரும் "முக்கட்பரமன்" எனக் கூறியிருத்தல் காண்க. பவளமலை – சிவந்தமேனிக்கு உவமை. அந்திநிறத்தொந்தி முகத்து ஐங்கரனைத் பந்தமறப் புந்தியுள் வைப்பாம் – உண்மை விளக்கம். புந்தி – புத்தி. அறிவில் வைத்து வழிபடுதல் மரபாதலின் "சிந்தை சேர்க்குதுமே" என்றார்.

## நூல்

பூமேவு நாபனும் நான்முகத் தோனும் புரந்தரனும்
தாமேவு வாழ்வும் அதிகார மும்பெறத் தார்புனைந்த
கோமேவு வேல்கொண்(டு) அவுணரைமாய்த்த குமரன்எங்கோன்
தூமேவு தாள்மலர் போரூரில் என்முடி சூடினனே 1

**கருத்துரை**

திருமாலும், நான்முகனும், இந்திரனும் தமக்குப் பொருந்திய வாழ்வையும் அதிகாரத்தையும் பெற வேண்டி, வெற்றிமாலையணிந்த எல்லாச் சிறப்புகளையும் தரவல்ல வேலினைக் கையில் ஏந்தி, அசுரர்களையெல்லாம் அழித்த குமரனாகிய எம் தலைவன் திருப்போரூர் என்னும் தலத்தில் தூய்மை பொருந்திய திருவடி மலர்களை எனது திருமுடியில் வைத்து திருவடி தீட்சை வழங்கினான்.

**அரும்பதவுரை**

மேவு – பொருந்திய. நாபன் – திருமால். நான்முகன் – பிரம்மா. புரந்தரன் – இந்திரன். தார் –மாலை. கோமேவு வேல் – எல்லாச் சிறப்புகளையுடைய வேற்படை. அவுணர் – அசுரர். தாள்மலர் – திருவடி.

**விளக்கவுரை**

முருகா = மு + ரு + கா. மு = முகுந்தன். ரு = ருத்ரன். கா = பிரம்மா. திருமால் மார்பில் திருமகளும், சிவபெருமான் தனது இடப்பாகத்தில் மலைமகளும், நான்முகன் தனது நாவில் கலைமகளும் இடம் பெற்றனர்.

திருமால், நான்முகன், இந்திரன் ஆகிய மூவர் வாழ்விலும் அதிகாரம் பெறச் செய்தவன் ஆதலில் "வாழ்வும் அதிகாரமும் பெற" என்றார். குமரனே தலைவனாதலின் "எங்கோன்" என்றும், எல்லாச் சிறப்புகளையுடையது வேலாதலின் "கோமேவு வேல்" என்றார். திருவடி தீட்சை பெற்றமை குறித்து சுவாமிகள் "முடிசூட்டினனே" என்றார் "இணையார் திருவடி என்தலை மேல் வைத்தலுமே" என்றார் மணிவாசகரும்.

முந்திய முதல் நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர் மற்றறிவார் – திருவாசகம்.

தெய்வப் பிடிவந்து சேருந் துகிர்க்கிரி செந்தளிர்போல்
மெய்வைத்த வள்ளிக் கொடிபடர் தாரு வியனுலகிற்
சைவப் பயிரை வளர்க்குந்தண் மேகந் தகைமைசெறி
நெய்வைத்த வேல்கொண்டு போரூரில் என்றும் நிகழ்தெய்வமே 2

**கருத்துரை**

தெய்வத்தன்மை பொருந்திய பெண் யானை வந்து சேரும் பவளமலையாகவும், சிவந்த தளிர் போன்ற திருமேனி அழகு வாய்ந்த வள்ளிக் கொடி படரும் மரமாகவும், அகன்ற இவ்வுலகில் சைவப் பயிரை வளர்க்கும் குளிர்ச்சி பொருந்திய மேகமாகவும், பெருமை பொருந்திய திருப்போரூர் என்னும் திருத்தலத்தில் என்றும் எழுந்தருளியுள்ள கந்தசுவாமிப் பெருமான் நெய் பூசப்பட்ட வேலினை வலக்கையில் கொண்டு ஒப்பற்ற தெய்வமாகத் திகழ்கின்றான்.

**அரும்பதவுரை**

பிடி – பெண்யானை. துகிர்க்கிரி – வெண்மையான மலை. பவளமலை – சிவந்தமலை. வள்ளிக்கொடி – வள்ளிப்பிராட்டி. தாரு – மரக்கொம்பு. தண்மேகம் – குளிர்ச்சிபொருந்திய முகில். தகைமைசெறி – பெருமை பொருந்திய. நிகழ்தெய்வமே – என்றும் விளங்குகின்ற கடவுள்.

**விளக்கவுரை**

யானைகள் மலைகளில் உலாவுதல் இயற்கை. ஆதலால் "தெய்வப்பிடி வந்து சேரும் துகிர்க்கிரி" என்றார். கொடிகள் மரத்தில் படருதல் இயற்கையாதலின் "கொடிபடர்தாரு" என்றார். பயிரை வளர்ப்பது தண்மேகமாதலின் "சைவப்பயிரை வளர்க்கும் தண்மேகம்" என்றும் முருகனை மேகமாகவும், தெய்வயானையை யானையாகவும், வள்ளிப்பிராட்டியை வள்ளிக் கொடியாகவும் வருணித்துள்ளார். இப்பாடலில் உவமையணி அமைந்துள்ளது.

தண்மேகம் – பண்புத்தொகை நிகழ்தெய்வம் – வினைத்தொகை.

கருதார் புரங்கொன்ற சேவக னார்க்குங் களிப்புறவே
ஒருதா ரகப்பொரு ளோதிய வாஉன தன்பரைப்போல்
தருதா ரணிசொலும் நாயேனும் அன்புளம் தானுளனோ
விருதாசெஞ் சேவற் சமரா புரிவரு வேலவனே. 3

## கருத்துரை

சிவந்த சேவற்கொடியை விருதாக உடையவனே – சமராபுரி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ளவனே. பகைவர்களுடைய முப்புரங்களை தனது நகைப்பினால் அழித்த சிவபெருமானது உளம் மகிழ்வடைய ஒப்பற்ற பிரணவப் பொருளை இருசெவியிலும் உபதேசம் செய்த ஞானபண்டிதனே – உனது அன்பர்களைப் போல இவ்வுலகினர் சிறப்பித்துக் கூறுமாறு நாயேனையும் அன்புடைய அடியவனாக இருக்கும்படி அருள் செய்வாயாக !

## அரும்பதவுரை

விருது – வெற்றியின் அடையாளம். புரம் – முப்புரம். சேவகனார் – சிவபெருமானார். களிப்பு – மகிழ்ச்சி. தாரகப் பொருள் – பிரணவப் பொருள். தாரணி – உலகினர். சொலும் – சொல்லும் இடைக்குறை. அன்புளந்தான். உளனோ – குறிப்பு வினா. சேவகனார்க்கும் – உம்மை உயர்வுப் பொருளில் வந்தது. நாயேனும் – இழிவு சிறப்பும்மை.

## விளக்கவுரை

முப்புரம் எரித்த வரலாறு வேதகிரீசுவரர் பதிகம் காண்க. தாரகப் பொருள் – "தகராலய ரகசியம்" என்னும் நூலினுள் பாம்பன் சுவாமிகள் அருளிய கருத்துணர்க – செஞ்சேவல் விருதா எனவும். சமராபுரி வேலனே எனவும் இயைத்துப் பொருள் காண்க – சேவலும் மயில்வாகனனின் வேலும், வெற்றியின் அடையாளமாக இருபுறமும் திகழ்கின்றன. ஆடும்பரிவேல் அணிசேவல் – கந்தர் அநுபூதியில் அருணகிரிநாதர் அருளிய முறையைக் காண்க.

சிற்றறி வொன்று  நினைப்போடு நித்திரை சேர்ந்தியங்கு
மற்றிவை நீங்கி லதுதான் எவைகளு மாகிநின்ற
அற்றமில் பேரறி வூடே கலந்திடு மாயவிதே
பற்றறு முத்தியென் றான்சம ராபுரிப் பண்ணவனே. 4

## கருத்துரை

திருப்போரூர் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருப்பவன் கந்தசுவாமிப்பெருமான் – அவ்விறைவன் சிற்றறிவாகிய ஆன்மாக்களில் சகல, கேவல என்னும் இரண்டு நிலைகளிலும் பொருந்தியுள்ளான். கனவு, நனவு என்னும் இரண்டு அவத்தைகளிலும் நீங்கிய நிலையில் அவ்வான்மா யாவும் தானாய் நின்று குறைதல் இல்லாத சிவமாய் விளங்குகிறது. அத்துவித நிலையில் கலந்து விளங்கும் இத்தன்மை மாயமானது. யான், எனது என்னும் இருவகைப் பற்றுகளையும் முற்றும் ஒழித்து மேலான வீடு பேற்றைத் தந்தருளுவான். அவனை எண்ணுவாயாக !

## அரும்பதவுரை

பேரறிவு – சிவம். சிற்றறிவு – ஆன்மா. நித்திரை – கனவு. நினைப்பு – நினைவு – வடமொழி நூலார் சாக்கிரம், சொப்பனம் என்பர். ஐந்தவத்தை – நனவு, கனவு, சுழுத்தி, துரியம், துரியாதீதம். பேரறிவோடே கலந்துறும் மாயவித்தை – முத்தியென்பதாம் இதனை 'அத்துவிதமுத்தி' என்பர் சித்தாந்த நூலார்.

## விளக்கவுரை

சிவம் பேரறிவுடையது – ஆன்மா அறிவித்தால் அறியும் தன்மையுடையது. ஆதலின் "சிற்றறிவு" என்றார். அத்துவித முத்தி – இருமையில் ஒருமைத் தொடர்பு – அஃதாவது உலகத்திற்கும் இறைவனுக்குமுள்ள தொடர்பு கலப்பினால் ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாயும், உயிர்க்கு உயிராகும் தன்மையால் உடனாயும் இருப்பது. இதுவே மெய்கண்டார் அருளிய மெய்ப்பொருள். "அற்பூரத் தொண்டர்க்கு அருள் முத்தி ஈதெனல்போல் கற்பூரத் தட்டில் கனல் வாய்ப்ப – தமிழ் விடு தூது – திருஞான சம்பந்தர் பெருமணநல்லூரில் (ஆச்சாள்புரம்)

அடியார்கள் அனைவருக்கும் முத்தியளித்ததும் கொற்றவன் குடி உமாபதி சிவாச்சாரியார் பெத்தான் சாம்பானுக்கும், க(மு)ள்ளிச்செடிக்கும் முத்தியளித்தமையும் இவ்வாறே.

எல்லார்க்கு மேலவன் நீ என்றறிந்துனை ஏத்திஅன்பாய்ப்
பொல்லாக் கருமலந் தீர்ந்தான் பொதியப் புகழ்முனிவன்
சொல்லாற் புனைதொங்கல் நக்கீரன் சாத்தித் துனிகடந்தான்
நல்லார்க்கு நல்லவ னேசம ராபுரி நாயகனே. 5

## கருத்துரை

திருப்போரூர் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள ஒப்பற்ற தலைவனே – பொதிய மலையில் தோன்றிய அகத்திய முனிவன் எல்லாக் கடவுளர்கட்கும் மேலானவன் என்று அறிவினால் அறிந்து, "முருகா" என உம்மைப் போற்றிப் புகழ்ந்து பிறவிப் பிணியைப் போக்கும் ஆணவ மலத்தினின்று நீங்கினான் – சொற்களால் புனையப்பெற்ற பாமாலைகளைப் பாடி நக்கீரதேவர் பொருட்குற்றம் என்னும் துன்பத்தினின்று தம்மை விடுவித்துக் கொண்டான். நல்லார்க்கு நன்மை தரும் கந்தசுவாமியே நல்லருள் புரிவாயாக !

## அரும்பதவுரை

ஏத்தி – புகழ்ந்து. கருமலம் – ஆணவமலம். பொதியப் புகழ் முனிவன் – அகத்தியன். தொங்கல் – மாலை. துனி – துன்பம். நாயகன் – ஒப்பற்ற தலைவன்.

## விளக்கவுரை

அகத்தியர்க்கு முருகப் பெருமான் ஞான உபதேசம் செய்தார். நக்கீரன் சங்கப் புலவன் – நெற்றிக் கண் காட்டினாலும் குற்றம் குற்றமே என மொழிந்தவன் – எல்லார்க்கு மேலவன் எனப் புகழ்ந்தது – வேதம். யஜுர் வேதத்தில் "ஓம் சுப்பிரமணியாய நம " என மும்முறை முழங்கியது. "ஒரு தரஞ் சரவணபவா" எனும் திருப்புகழ் காண்க. பூமாலை வாடும் –

பாமாலை வாடாது. பொன்மாலைக்கு மணமில்லை. ஆதலால் அடியவர்கள் பாமாலை சூடினர். நல்லார்க்கு நல்லவன் மட்டும் அன்று – தீயவர்கள் எவரேனும் குமரவேள் திருமுன் சென்றால் தூயவராகித் மேலைத்தொல்கதி அடைவர். தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் உற்றால் – கந்தபுராணம் காண்க.

தோட்குங் குமமொக்குங் கோக்குழை மாதர்க்குந் தொல்லைமத
வேட்கும் உளங்குலைந் தேனைவி டேல்விண்டு மாமலர்க்கை
வாட்குங் கொடிய மருப்பார் மகிடன் வளைப்பிலுறா(து)
ஆட்கொண் டருளுகண் டாய்போரி வாழும் மயிலவனே. 6

## கருத்துரை

தோளில் அணிந்த குங்கும நிறத்தைப் போன்று சிறந்து விளங்கும் அணிகலனையும், காதில் பெரிய குழை போன்ற குண்டலத்தையும், அணிந்த பெண்களுக்கும், தொன்று தொட்டு விளங்கும் மன்மதனுக்கும், நிலைகுலைந்த மனத்தையுடைய என்னை திருப்போரூரில் வாழும் மயிலை ஊர்தியாக உடைய முருகக் கடவுளே – கைவிடாமல் எம்மைக் காப்பாயாக. திருமாலின் தாமரை மலர் போன்ற கையினால் ஏந்திய வாளைக் காட்டிலும், கொடுமை வாய்ந்த கொம்புகளையுடைய எருமைக்கடாவை ஊர்தியாகக் கொண்ட இயமனது வலையில் அகப்படாமல் அடிமை கொண்டு அருள்வாயாக !

## அரும்பதவுரை

குங்குமநக்கும் – குங்கும நிறத்தையுடைய அணிகலன். கோக்குழை – காதில் அணியும் குழை என்னும் அணிகலன். மதவேள் – மன்மதன். விண்டு – விஷ்ணு. மலர்க்கை – உவமைத்தொகை. மருப்பு – கொம்பு. மகிடன் – எருமைத்தலையை வாகனமாகக் கொண்ட இயமன்.

## விளக்கவுரை

மண்ணாசை, பொன்னாசையைக் காட்டிலும் பெண்ணாசை மிகவும் துன்பந்தரத்தக்கது. “பேசரிய பெண்ணாசை யாதி பிடித்துழன்றேன்” மாலை 81. இயமன் வலையில் அகப்படாது. “ஆட் கொண்டருளு கண்டாய்” என்றார். “குமரா நம” என்று இயமராசன்

கைபுகுதார்'' – மாலை 47. காலன் எனை அணுகாமல் அருள்புரிவாயே – திருப்புகழ். பெண்ணாசையால் உழல்பவர் உளம் நிலை குலைந்து போதலை "உளங்குலைந்தேனை" என்றார்.

அண்டஞ் சராசரம் எண்திசை யாவும் அளித்தவளும்
கண்டங் கரிய சிவனும் தம் அங் கரங்களின்மேல்
மண்டன்பின் ஏந்திய முறைமுறை தந்து மகிழ்மதலாய்
தொண்டன் பெனக்கும் உளதோதென் போரிச் சுராதிபனே. 7

**கருத்துரை**

தென்திசையில் உள்ள திருப்போரூர் என்னும் திருத்தலத்தில் தேவர்கட்குத் தலைவனாக எழுந்தருளியிருப்பவனே – இவ்வுலகங்களையும், அசையும் மற்றும் அசையாப் பொருள்களையும், எண்திசைகளையும் பெற்றருளும் உமாதேவியும், கருமை நிறம் பொருந்திய கழுத்தினையுடைய சிவபெருமானும், தமது அழகிய திருக்கைகளில் பொருந்திய பின், அன்பினோடு புகழ்ந்து, முறையாக தமக்கிருவருள் ஒருவராகத் தம் அன்பினைத் தந்து மகிழ்வடையும் சிறுபிள்ளாய் – அடியேனுக்கும் தேவரீர் தமது திருவடியைத் தந்து வழிபாடு செய்யும் அன்பினை எமக்குத்தந்து அருள்வாயாக !

**அரும்பதவுரை**

அண்டம் – உலகம். சராசரம் – அசையும் மற்றும் அசையாப்பொருட்கள். கண்டங்கரிய – கருமைநிறம் பொருந்திய கழுத்தினை உடையவன் நீலகண்டன். மண்டு – பொருந்தி. ஏத்தி – ஏந்தி – மெலிதல் விகாரம். மகிழ்மதலை – வினைத்தொகை. தொண்டு – வழிபாடு.

**விளக்கவுரை**

அண்டம் அனைத்தும் ஈன்றவள் உமையாதலின் "அண்டம்....... அளித்தவளும்" என்றார். அமுதத்தினை தேவர்கட்கு ஈந்து நஞ்சினைத் தாம் உண்டமையால் "கண்டங்கரிய சிவன்" என்றார். தாய் தந்தையரை அன்பினால் வழிபாடு செய்தல் மரபாதலின் "மண்டன்பின் ஏந்தி" என்றார். தொண்டும் அன்பும் இணைபிரியாதவை. தமது அன்பின் நிலையைத் தாம்

அறியார். ஆதலின் "தொண்டன்பு எனக்கும் உளதோ" என்றார். உளதோ? என்பது குறிப்பு வினா ? உளது என்பது விடை. சுராதிபன் – தேவர்கட்குத் தலைவர்.

கொங்கணர் ஆரியர் ஒட்டியர் கோசலர் குச்சரராஞ்
சிங்களர் சோனகர் வங்காளர் ஈழர் தெலுங்கர்கொங்கர்
அங்கர் கலிங்கர்கன் னாடர் துருக்கர் அனைவருமே
தங்கள்தங் கட்கிறை நீயென்பர் போரிச் சரவணனே. 8

**கருத்துரை**

திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் சரவணப் பெருமானே. கொங்கணர், ஆரியர், ஒட்டியர், கோசலர், குச்சரர், சிங்களர், சோனகர், வங்காளர், ஈழர், தெலுங்கர், கொங்கர், அங்கர், கலிங்கர், கன்னடர், துருக்கர், ஆகிய அனைவரும் தத்தமக்குரிய சமயத்திற்குப் பொருந்திய கடவுள் நீயே என எண்ணிப் போற்றிப்புகழ்வர்.

**அரும்பதவுரை**

கொங்கணர் – கொங்கு நாடு. ஆரியர் – இமயமலைக்கும், விந்திய மலைக்கும் உள்ள நாடு. ஒட்டியர் – ஒரிஸா. கோசலம் – அயோத்தி. குச்சரர் – குஜராத்தியர். சிங்களர் – இலங்கை (கொழும்பு). சோனகர் – யவனநாடு வங்காளர் – வங்கதேசம். ஈழர் – இலங்கையின் வடகிழக்குப் பகுதி. தெலுங்கர் – ஆந்திரர். கொங்கர் – துளுமொழி பேசுவோர். அங்கர் – வாலி, சுக்ரீவன் நாடு. கலிங்கர் – ஆந்திராவின் வடபகுதி. கன்னடர் – கருநாடகம். துருக்கி – துலுக்கர்

**விளக்கவுரை**

எல்லாச் சமயங்கட்கும் இறையாதலின் "தங்கள் தங்கட்கிறை நீயென்பர்" என்றார். "அறுவகைச் சமயத்தோர்க்கும் அறுமுகச் சமயமாகி" என்றார் பிறரும்.

மான்சூட் டிறைச்சிசெந் தேன்தோய்த்(து) அருந்தும் வனசரர்மான்
கூன்கோட்டிளம்பிறை நெற்றிக்கும் வேலிணைக் கூர்விழிக்கும்
கான்கூட்ட மாமலர்க் கூந்தற்கும் கொங்கைக்கும் காதல் கொண்டோன்
தேன்கூட்டம் வாழ்பொழிற்போரூரன் என்குரு தேசிகனே. 9

**கருத்துரை**

தேனீக்கள் கூட்டமாக வாழுகின்ற சோலையுடைய திருப்போரூரில் வாழ்பவனும் எனக்கு ஞானாசிரியனாகவும் விளங்குகின்ற கந்தப்பெருமான் மானினது இறைச்சியை நெருப்பினால் சுட்டு சிவந்த தேனினைக் கலந்து அருந்தும், மான் வயிற்றில் பிறந்த வேடுவர் குலத்தலைவனது மகளாகிய வள்ளிப் பிராட்டியினது வளைந்த கொம்பினையுடைய பிறைச்சந்திரன் போன்ற திருநுதலுக்கும், வேல்போன்ற கூர்மையான திருக்கண்களுக்கும், கானகத்தில் கூட்டமாகப் பூத்திருக்கும் மலர்களைச் சூடிய அழகிய கூந்தலுக்கும், கொங்கைகட்கும் பேரன்புகொண்டவனாய் விளங்குகின்றான்.

**அரும்பதவுரை**

வனசரர் – வேடுவர். கூன்கோடு –வளைந்த கொம்பு. இளம்பிறை – பிறைச்சந்திரன். கான் – காடு. மாமலர் – உரிச்சொல் தொடர்.

**விளக்கவுரை**

மான் வயிற்றில் பிறந்த வள்ளிப்பிராட்டியின் நெற்றிக்கும், கூர்மையான கண்களுக்கும், கூந்தற்கும், கொங்கைக்கும், காதல் கொண்டவன். சிற்றின்ப வேட்கை உடையவன். குருதேசிகனாக உள்ளான் என்பது வியப்பு. “மான் சூட்டிறைச்சி செந்தேன் தோய்த்தருந்தும் வனசரர் மான். மான் – மானினையும், வள்ளிப் பிராட்டியையும் குறித்தது. இளம்பிறை நெற்றிக்கும் இணைவேல் கூர்விழிக்கும் உவமை. தேன்கூட்டம் போன்று போரூர் பொழிலில் மக்கள் கூட்டம். மொய்த்தனர் என்பது உள்ளுறை உவமை.

கோக்குஞ் சரமத நாற்றம் தவிர்த்துக் குலநரந்தந்
தேக்கும் புழுகு மணம்வீசும் போரியர் தேவைசெவ்வேள்
நோக்கும் விழியருள் போக்கும் பிணியினை நூபுரத்தாள்
காக்கும் பவம்புக வொட்டா தெமக்கென் கவலைநெஞ்சே. 10

**கருத்துரை**

அரசனது மதயானையின் நாற்றத்தைத் தவிர்க்க கஸ்தூரி முதலிய நறுமணப் புகையால் நறுமணம் வீசும் திருப்போரூரில், தேவர்களைக் காத்த செவ்வேளது திருக்கண் நோக்கத்தால், பிறவிப்பிணி நீங்கும், சிலம்பணிந்த திருவடிகள் அன்பர்களைக் காக்கும் நெஞ்சமே கவலை கொள்ளற்க.

**அரும்பதவுரை**

கோக்குஞ்சரம் – அரசனது மதயானை குலநரந்தம் – கஸ்தூரி, கோரோஜனம், புழுகு – வாசனைப் பொருள். புனுகு என்பர். நூபுரம் – சிலம்பணிந்த திருவடிகள். பவம் – பிறவி. மதநீர் = மும்மலத்திற்கு உவமை. விழியருள் – திருக்கண் நோக்கம். உருவகம். செவ்வேள் விழியருள் நோக்கும், பிணியினைப் போக்கும் என மொழிமாற்றிப் பொருள்காண்க. நெஞ்சே கவலை கொள்ளற்க.

**விளக்கவுரை**

ஆணவமலம் பிறவிக்கு வித்தாதலின் விழியருள் அதனைப் போக்கும் என்பார். ''நோக்கும் விழியருள் போக்கும் பிணியினை'' என்றார். திருக்கண் நோக்கால் பவப்பிணி நீங்கும் என்பது கருத்து. பவம் புக வொட்டாது. சிலம்பணிந்ததாள் காக்கும் என்பார். ''நூபுரத்தாள் காக்கும்'' என்றார். மலர்சிலம்படி என்பார் சேக்கிழாரும், கம்பரும். உள்ளக் கவலையெலாம் ஒழிந்தேன் – அலங்காரம் 51.

ஆயன் குழலிசை கேட்கும் பணாமுடி ஆடரவம்
வாயையங் காந்து மணிகா லுதல்வள்ளல் பாடல்கொண்டு
தூய கொடைகொடுத் தாங்குறும் போரிச் சுராதிபனை
நாயக னைக்கும ரேசனை நாடுவர் ஞானிகளே. 11

## கருத்துரை

பசுக்களை மேய்க்கும் ஆயர் இனத்தினர் இசைக்கும் புல்லாங்குழலின் ஓசையைக் கேட்டு படம் விரித்தாடும் தலையையுடைய பாம்புகள் தனது வாயைத் திறந்து இரத்தினங்களை உமிழ்தல் போல வள்ளல் தன்மையுடைய ஒருவன், புலவர்கள் பாடும் பாடலைக் கேட்டு, அறவழியில் ஈட்டிய பொருளைக் கொடுத்தாற்போன்று, திருப்போரூரில் எழுந்தருளிய தேவர்கள் தலைவனை, இறைவனை, குமரக் கடவுளை மெய்யறிவாளர்கள் என்றும் உள்ளத்திலே எண்ணுவார்கள்.

## அரும்பதவுரை

குமரன் – என்றும் இளையோன். பணாமுடியரவம் – படம் விரித்தாடும் தலையையுடைய பாம்பு . அங்காந்து – வாய்திறந்து. மணி – இரத்தினம். காலுதல் – உமிழ்தல். தூயகொடை – அறவழியில் ஈட்டிய பொருளைக் கொடுத்தல். சுராதிபன் – தேவர்கட்குத் தலைவன். ஞானிகள் – மெய்யறிவாளர்கள்.

## விளக்கவுரை

பாம்புகள் குழலோசைக்கு உருகி இரத்தினங்களை உமிழ்தல் போன்று புலவர்கள் பாடும் பாடலைக் கேட்டுப் பொருள் கொடுப்பது வள்ளல்களின் பண்பு – நீயும் வள்ளல் ஆதலின் மெய்யறிவாளர்கள் உம்மை நாடுகின்றனர். அருளைத் தர வேண்டும் என்பது குறிப்பு – தேவர்களது துன்பத்தினை நீக்கியமையால் "சுராதிபன்" என்றார்.

இடமுறச் சூழும் முழைதோறும் நாகம் எரிபுரையும்
படமணிச் செங்கனி எடுத்தாடல் தன் மங்கலப் பந்தரிலே
சுடர்மணித் தண்டினைச் சூழ விளக்கிட்ட சோதிஒக்குந்
தடவரைப் போரிச் சரவண நாயகன் தஞ்செனக்கே 12

## கருத்துரை

திருப்போரூரில் உள்ள பிரணவ மலையில் எவ்விடத்தும், எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்த குகைகள் தோறும் தீ நிறத்தைப் போன்று

மாணிக்கங்களையுடைய பாம்புகள் படமெடுத்து ஆடுதலைப் போன்று விளங்குகின்றன. திருமணப்பந்தலில் அமைந்துள்ள ஒளிபொருந்திய மணிகளை உடைய கிளை விளக்குத் தண்டினைச் சூழ, விளக்கு ஏற்றிய ஒளியைப் போல தோன்றுகின்றன. பெரிய மலை சூழ்ந்த திருப்போரூரில் எழுந்தருளிய சரவணப் பொய்கையில் தோன்றிய இறைவன் எமக்குப் புகலிடமாவான்.

**அரும்பதவுரை**

இடம் – மலையும் மலை சார்ந்த இடம். முழை – குகைகள். நாகம் – பாம்பு. சென்னி – தலை. மங்கலப் பந்தர் – மணப்பந்தல். சுடர்மணித்தண்டு – கிளை விளக்கு. தடவரை – பெரியமலை. தட – உரிச்சொல். நாயகன் – தலைவர். தஞ்சம் – அடைக்கலம். ஒக்கும் – நிகர்க்கும். உவமை.

**விளக்கவுரை**

மலையைக் கிளை விளக்குத் தண்டாகவும், அதன் பக்கத்தில் தோன்றும் குகைகளை கிளை விளக்குகளாகவும், மாணிக்கம் பொருந்திய பாம்புத்தலைகள் படம் எடுத்தாடுதலை. அதனில் ஏற்றிய ஒளியாகவும் ஒப்புமை கூறினார். புரையும், ஒக்கும் – உவம உருபுகள். உவமையணி பயின்று வந்துள்ளது.

முருகன் ஒளி வடிவானவன் ஆதலின் "சோதி ஒக்கும்" என்றார்.

பிடிபார்த் தலற எயினச் சிறார்கள் பிரிந்தகன்றைக்
கொடியாற் பிணித்ததன் மேலேறி ஆடுங் குளிர்பொழில்சூழ்
அடிவாரப் போரிப் பதிவே லவனைவந் தண்டினனென்
குடியார்க்கு நல்ல கதிவாய்த்த தென்றுளங் கொண்டனனே. 13

**கருத்துரை**

பெண் யானையைப் பார்த்து அச்சம் கொண்டு கதறும் வேடச்சிறுவர்கள் தம்மினத்தினின்று பிரிந்த யானைக் கன்றினைக் கொடியால் கட்டி அக்கன்றுகளின் மீது ஏறி விளையாடும் குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த பிரணவமலையின் அடிவாரத்தில் திருப்போரூர் என்னும்

திருப்பதியில் வாழும் கந்தக் கடவுளை அடைந்து சரண்புகுந்தேன். எனக்கு மட்டுமல்லாமல் என்குடியில் உள்ள அனைவருக்கும் நல்ல கதி கிடைத்தது என்று உள்ளம் தேறினேன்.

**அரும்பதவுரை**

பிடி – பெண்யானை. அலற – கதற. எயினச்சிறார்கள் – வேடுவச் சிறுவர்கள். கன்று – யானைக்கன்று. பிணித்து – கட்டி. பொழில் – சோலை. பதி –ஊர். அண்டினன் – சரண் புகுந்தேன். உளம் – உள்ளம்.

**விளக்கவுரை**

என்குடியில் உள்ள அனைவர்க்கும் நல்ல கதி கிடைத்தது என்பதால் எனக்கும் நல்லகதி கிடைத்தது என்பதைக் கூற வேண்டாவாயிற்று. பிரணவ மலையின் அடிவாரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளான் என்பதை "அடிவாரப் போரிப்பதி" என்றார்.

தோகை நடித்திட வேடச் சிறாருழைத் தோற்பறையை
நாகம் பறித்துலர் வாகைநெற் றாற்கொட்ட நாடியளி
ஓகை தரும்பண் ணிசைபாடுஞ் சந்தன ஒண்பொழில்சூழ்
மாகர் தொழுந்திருப் போரூரன் தாளென் மதிவிழியே 14

**கருத்துரை**

மயில்கள் நடனமாடவும், வேடுவச் சிறுவர்கள் மான்தோலால் கட்டிய பறைக் கருவியை, யானை பறித்தலால், உலர்ந்த வாகை மரத்தின் நெற்றினால் கொட்டவும், வண்டுகள் உணர்ந்து ரீங்காரமிடும் ஓசை கேட்போர்க்கு மகிழ்வூட்டும் இசைப் பண்ணாகவும் மணம் வீசும் சந்தன மரங்கள் சூழ்ந்த தேவர்கள் வணங்கும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள இறைவன் திருவடி அடியேனுடைய மனக்கண்ணில் என்றும் உள்ளது.

**அரும்பதவுரை**

தோகை – மயில்தோகை. சிறார் – சிறுவர்கள். நாகம் – யானை. வாகை – வாகைமரம். உழை – மான். அளி – வண்டு. ஓகை – ஓசை. பொழில் – சோலை. மாகர் – தேவர். தாள் – திருவடி. மதிவிழி – மனக்கண்.

**விளக்கவுரை**

"சகச நிட்டை" ஸ்ரீ குமாரதேவர் அருளிய நூல்களுள் ஒன்று. மனக்கண்களால் திருவடியை இடைவிடாது நினைத்தல். "போரூரன் தாள் என் மதிவிழி" என்பதால் அதனை உணரலாம். குறவர்கள் – குறிஞ்சி நிலப்பொருளாகிய மானையும், வேடர்கள் பாலை நிலக்கருப்பொருளாகிய வாகையையும் கூறினார்.

குறிஞ்சி நிலத்தில் வாழும் குறவர்களும், பாலை நிலத்தில் வாழும் வேடர்களும் இனத்தால் ஒன்றுபட்டவர்கள்.

மேகங்கள் சூற்கொண்டு சாரற் படிந்து மிகக்குமுற
நாகங்கள் கோடிறப் பாயத் தெறித்த நகைத்தரள
மோகந் தருங்குற மின்னார்கள் மேலுற மொய்த்தெதிர்பார்த்
தாகந் தடவிய போரூர்க் குகன்என் அருள்தந்தையே 15

**கருத்துரை**

மேகங்கள் கருக்கொண்டு மலைச்சாரலில் தவழ்ந்து பெருமுழக்கம் செய்யவும், அதனைக் கேட்ட யானைகள் தமக்குப் பகையென்று தந்தங்கள் முரிய அம்மேகங்கள் மீது பாய்தலால், அந்தத் தந்தங்களின்று சிந்திய ஒளிபொருந்திய வெண்முத்துக்கள், தம் கணவர்க்கு மயக்கமூட்டும் குறப்பெண்கள் மேல் வந்து வீழ, எதிரே வந்து நெருங்கிப் பார்த்து முத்தம் என்று அவர்கள் உடம்பைத் தடவவும், திருப்போரூரில் எழுந்தருளிய இறைவன் எனது உள்ளமாகிய குகையில் வாழ்பவன். அருள் வடிவாகிய தந்தையாவான்.

**அரும்பதவுரை**

சூற்கொண்டு – கருக்கொண்டு. சாரல் – மலைச்சாரல். குமுற – ஒலிக்க. நாகங்கள் – யானைகள். கோடு – கொம்பு (தந்தம்) நகைத்தரளம்

– வெண்முத்து. மோகம் – மயக்கம். குறமின்னார்கள் –குறப்பெண்கள். ஆகம் – மார்பு.

**விளக்கவுரை**

மேகங்கள் சூல்கொண்டு இடிஇடித்து மின்னல் மின்னி மழை பொழிதல் இயல்பு. அதனைப் பகையென்று எண்ணிய யானைகள் தமது கொம்புகள் ஒடியுமாறு பாய்ந்தன. முத்துக்கள் சிந்தின. சிந்திய வெண் முத்துக்கள் முத்தங்களாயின என்பது கற்பனை. உள்ளமாகிய குகையில் வாழ்பவன் ஆதலின் "குகன்" என்றார். அருள் வடிவாகிய தந்தை யாதலின் "அருள்தந்தை" என்றார்.

வரைமுத் தொளிரும் பனிக்கா டரங்கின் மயில்நடித்தல்
புரையில் சசிமண் டலத்தாடல் மாதர் புரிவதொக்கும்
விரவுற்ற சாரலம் போரூர் விசாகன் விரைமலர்த்தாள்
உரையற் றுணர்வற் (று)உயரின்ப மாகிய உள்ளொளியே. 16

**கருத்துரை**

மூங்கில் வெடித்த முத்துக்கள் கீழே விழுந்து ஒளி வீசும் பளிங்குப் பாறையாகிய கானகம் எனும் நாடக மேடையில் மயில்கள் நடனமாடுதல். குற்றமற்ற திங்கள் மண்டிலத்தில் பெண்கள் நடனம் ஆடுவதைப் போன்று விளங்குகின்றன. மலைச்சாரலோடு பொருந்திய அழகிய திருப்போரூரில் எழுந்தருளிய கந்தப்பெருமானது நறுமணமிக்க தாமரை மலரையொத்த திருவடி, மனவாக்கையும் கடந்து உயர்ந்த பேரின்பமாகிய பேரொளியாகி எனது உள்ளத்தில் திகழ்கின்றது.

**அரும்பதவுரை**

வரை – மூங்கில். காடரங்கு – கானகம் எனும் நாடகமேடை. புரை – குற்றம். சசிமண்டிலம் – திங்கள் மண்டிலம். ஒக்கும் – நிகர்க்கும். உரையற்று. உணர்வற்று – மனவாக்கைக் கடந்து. உள்ளொளி – பேரொளி. விரவுற்ற சாரலம் போரூர் – திருப்போரூர்.

**விளக்கவுரை**

பளிங்குப் பாறையில் மயில்கள் நடனமாடுதல் திங்கள் மண்டிலத்தில் பெண்கள் நடனமாடுவதைப் போன்று இருந்தன. இல்பொருள் உவமை – மயில் நடித்தல் – தொழிற்பெயர். உரையற்று உணர்வற்று உயர் பேரின்பம் – பேசா அநுபூதி. உள்ளொளி – பேரொளி.

பளிக்கறை யூடு தருக்குழைப் பாயலில் பள்ளிகொண்டே
களிக்குறு மாகந் தருவார்தங் கீதமுங் காரையினால்
விளக்குறு மேனிலத் தோகையர் கீதமும் வேறறவே
கிளக்க லுறுந்திருப் போரூரன் அன்பர்தம் கேண்மையனே. 17

**கருத்துரை**

பளிங்குப் பாறையினில் சந்தன மரக்குழம்புகளால் அமைந்த படுக்கையை தங்கள் உறைவிடமாகக் கொண்டு மனமகிழ்ச்சி கொள்ளும் பெருமை வாய்ந்த கந்தருவர் பாடும் இசையும், பொன்போன்று விளங்கும் தேவலோகத்தில் அரம்பை மாதர்கள் பாடும் இசையும், தம்முள் மாறுபாடு இன்றி ஒலிக்கும் திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக்கடவுள் தன்னிடத்தில் அன்பு செலுத்தும் அடியவரை உறவினராக உடையவன்.

**அரும்பதவுரை**

பளிக்கறை – பளிங்குப்பாறை. தரு –சந்தனமரம். குழை – குழம்பு, சேறு. பாயல் – படுக்கை. காரை – பொன். மேனிலம் – தேவர்உலகம். தோகையர் – பெண்கள். கீதம் – இன்னிசைப்பாடல். கிளக்கல் – ஒலித்தல். கேண்மை – நட்பு, உறவு.

**விளக்கவுரை**

பிறப்பு, இறப்பு இல்லாதவன் முருகன் என்னும் அடியவர்களை உறவினராகக் கொண்டுள்ளான். ஆதலின் "அன்பர் தம் கேண்மையனே" என்றார். கந்தருவர் கீதமும், அரம்பையர் கீதமும் வேறுபாடு இன்றி

ஒலித்தன. ஆண் பெண் வேறுபாடின்றிப் பாடினர். ஆதலின் "வேறறவே" என்றார். "கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால் கேட்டறியோம்" – திருவாசகம். திருப்பள்ளியெழுச்சி – 5. பண்ணோடு கூடிய பாடலைக் "கீதம்" என்பர். ஆதலால் நாட்டுப்பண்ணை "தேசிய கீதம்" என்பர்.

கருநாகக் கொண்டைக் கயமுனிக் கூட்டங்கள் கல்லுச்சில்லுப்
பொருநாசிக் கேழ லுடனாடுஞ் சாரலம் போரிச்செவ்வேள்
இருபாத தாமரை ஏத்தி வணங்கிஎந் நாளுநினைந்
தொருவா திருந்திலை நெஞ்சேயென் வீணில் உழன்றனையே. 18

## கருத்துரை

கருமை நிற நாகப்பாம்பினையொத்த துதிக்கையினையுடைய யானைக்கன்றின் கூட்டங்களும், கல்லால் அமைந்த சிறு துண்டின் துளையைப் போன்ற மூக்கினையுடைய பன்றியோடு விளையாடும் பிரணவ மலைச்சாரலில் விளங்கும் கந்தப்பெருமானது தாமரை மலர் போன்ற இரு திருவடிகளையும் புகழ்ந்து வணங்கி, நீ எந்நாளும் இடைவிடாது நினைந்திடில் நெஞ்சமே வீணாகப் பந்த பாசத்தில் உழலமாட்டாய்.

## அரும்பதவுரை

நாகம் – பாம்பு. தொண்டை – துதிக்கை. கயம் – யானை. நாசி – மூக்கு. சில்லு – சிறுதுண்டு. கேழல் – பன்றி. இருபாததாமரை – உருவகம்.

## விளக்கவுரை

யானையின் துதிக்கை வளைந்து நெளிதலால் கருநாகப்பாம்புக்கு உவமை. பன்றியின் நாசி வலிமையானதால் கல்லால் ஆன சிறு துண்டுக்கு உவமை. ஏத்துதலும், வணங்குதலும் புறத் தொண்டுகள் நினைதல் – அகத்தொண்டு. எந்நாளும் நினையாமல் உலக போகங்களில் உழன்றதால் "நெஞ்சே நினை" என்பது குறிப்பு.

அகிலேந்து நல்ல முகிலேய்ந்த கூந்தல் அரிவையர்தம்
நகிலேந்தும் ஆர வடம்போல் அருவி நகந்திகழும்
முகிலேந்தும் மாடநம் போரூர்க் குகன்பத முண்டகத்தைத்
தகிலேந்து நெஞ்சினர் மேல்மத வேள்எய்யத் தானஞ்சுமே. 19

**கருத்துரை**

அகில்புகை கமழும் கருமையான மேகத்தைப் போன்ற கூந்தலையுடைய பெண்களின் கொங்கைகள் ஏந்திய முத்து வடத்தைப்போல, அருவிகள் பாயும் மலைகள் விளங்கும் மேகங்கள் தவழும் மாடங்களை உடைய திருப்போரூரில் எழுந்தருளிய குகனது தாமரை மலர் போன்ற திருவடிகளை தமது நெஞ்சில் நிலை நிறுத்தியவர் மேல் மன்மதன் தாமரையாகிய மலரில் அம்புகளை செலுத்த அஞ்சுவான்.

**அரும்பதவுரை**

அகில் – நறுமணம்மிக்க மரம். முகில் – மேகம். நகில் – கொங்கை. ஆரவடம் போன்ற அருவிகள். நகம் – மலை. முண்டகம் – தாமரை. மதவேள் – மன்மதன். இப்பாடலில் உவமையணி பயின்று வந்துள்ளது.

**விளக்கவுரை**

கொங்கைகளின் மேல் அணிந்த ஆரவடம் போன்று, அருவிகள் பாயும் மலைகள் உடைய பொருள்கள் என உவமை கூறினார். தாமரை மலர் போன்ற கந்தனது பாதங்களை வணங்கினால் மன்மதன் மலர் அம்புகளை எய்ய அஞ்சுவான் என்பதால் ஏனைய கணைகளையும் எய்யமாட்டான் என்பதாம். மன்மதன் மலர்க்கணைகள் ஐந்து என கந்த புராணம் கூறுகிறது.அவை தாமரை, மா, அசோகம், முல்லை, கருங்குவளை என்பதாம்.

மதுவார்த் திடுகடம் போலே மயக்குறு மாதரையோர்
கொதுவாக் கருதுறுங் காலமுண் டோகொடி யேன்தனக்கே
விதுவாற் சலந்தரும் கற்சுனை யூடு விளங்கு பிடி
சதுராக் குடைந்து விளையாடும் போரிச் சரவணனே 20

## கருத்துரை

திங்கள் ஒளியால் நீரை வெளிப்படுத்தும் சந்திரகாந்தக்கல் உள்ள நீர்ச்சுனையில் பெண்யானைகள் திறமையாக மூழ்கி விளையாடும் திருப்போரூரில் விளங்கும் சரவணனே கள் நிரம்பிய குடத்தைக் கண்ட ஆடவரை மயக்கும் பெண்கள் ஒரு கொசுவாகக் கருதும் காலத்தில் நினது திருவடியை எண்ணாத கொடுமையை உடைய காலமும் அடியேனுக்கும் உளதோ.

## அரும்பதவுரை

மது – கள். கடம் – குடம். கொது – கொசு. கற்சுனை – சுனைநீர். பிடி – பெண்யானை. சதுரா – தகுதி, திறமை

## விளக்கவுரை

பெண்களைக் கொசுவாக நினைக்கும் காலம் மனதுக்கு உண்டாகிவிடின் பந்த பாசங்களினின்று விடுபடலாம் என்பதனை "கொதுவாக் கருதுங்காலம்" என்றார். பெண் யானைகள் நீரில் மூழ்கி விளையாடுதல் "பிடி சதுராக் குடைந்து" என்பதால் தகுதியும் திறமையும் வெளிப்படும். மயக்குறு மாதர்கள் மதுவார்த்திடும் கடத்திற்கு உவமை. மதுவும் மாதுவும் மயக்கம் தரத்தக்கவாகலின் அம்மயக்கம் நீங்கும் "காலமுண்டோ" என்றார்.

அள்ளித் தெளித்தன்ன கள்ளிவெந் நீழ லணுகுழைதான்
அள்ளிப் புனலெனப் பேய்த்தேரை நாடி நலிவது போல்
உள்ளிப்பொய் வாழ்வினை ஊர்தொறுஞ் சென்றுழலா தெனையாள்
வெள்ளிப் பொருப்பினன் மைந்தாதென் போரியில் வேலவனே 21

## கருத்துரை

அள்ளித் தெளித்தாற்போன்று கள்ளிச் செடியினுடைய கொடிய நிழலை அடைந்து சேர்ந்த மான் நிழலை நீர் என விரும்பிச் சேர்ந்து வருந்துவதைப் போல பொய் வாழ்வை மெய் என எண்ணி ஊர் தோறும்

பொருள் தேடச் சென்று வருந்தாமல், எமக்கு அருள் செய்வாயாக வெள்ளிமலையாகிய இமயமலையில் எழுந்தருளிய சிவபெருமானின் மகனே – தென்திசையில் எழுந்தருளியிருக்கும் வேலேந்திய கந்தப் பெருமானே.

**அரும்பதவுரை**

கள்ளி வெந்நீழல் – கள்ளிச் செடியின் கொடிய நிழல். நீழல் – நீட்டல் விகாரம். உழை – மான். பேய்த்தேர் – கானல் நீர். நாடி – சென்று. உள்ளி – நினைந்து.

**விளக்கவுரை**

கள்ளி மரத்தின் நிழல் அள்ளித் தெளித்தாற் போன்றது. அன்ன – உவமஉருபு. வேறு மரத்தின் நிழல் இன்மையால் கள்ளிச்செடியின் நிழலை அணுகியது. மான் இறைவன் திருவடி நிழலை அணுகாது. கள்ளிச் செடியின் நிழலை அணுகுவது மனித இயல்பு. உலக வாழ்வு பொய் வாழ்வு. இறைவன் திருவடியே மெய் என உணர்க. "மாசில் வீணையும்" எனத் தொடங்கும் அப்பர் பாடலில் "ஈசன் எந்தை" இணையடி நீழலே என்றார்.

முடைமாற முல்லை குழல்சூடும் ஆய்ச்சியர் மூதளைதான்
கடைதோறும் ஆரத்தின் மார்பில் தெறித்திடக் கன்றுதுள்ளும்
புடைபாய் உழுவை குமுறுமென் றிந்நிலப் போரிளங்கோன்
படைவேல் துணைஉண் டெமக்கொரு நாளும் பயமில்லையே. 22

**கருத்துரை**

ஆய்ச்சியருடைய இல்லங்களில் முடை நாற்றமானது. நீங்கும்படி முல்லை மலரைக் கூந்தலில் அணியும் பெண்கள் செறிந்த கட்டியாகவுள்ள தயிரைக் கடையும் பொழுது சந்தனக் குழம்பு போன்று தமது மார்பில் தெறிக்கவும், பசுவின் கன்றுகள் அருகில் பாயும் புலியின் முழக்கம் என்று அஞ்சித்துள்ளி விளையாடுவது போன்று இருந்தன. அத்தகைய திருப்போரூரில் எழுந்தருளிய வேலாயுதம் என்றும் துணையாக உள்ளது. ஆகவே எந்நாளும் அஞ்ச வேண்டுவதில்லை.

**அரும்பதவுரை**

முடை - முடைநாற்றம். மூதளை - கெட்டித்தயிர். ஆரம் – சந்தனக்குழம்பு. புடை – பக்கம். உழுவை – புலி. குமுறும் – பேரொலி

**விளக்கவுரை**

முடைநாற்றம் நீங்க முல்லை மலர் அணிந்தனர். நறுமணம் முடை நாற்றத்தைப் போக்கியது. பசுவின் கன்றுகள் புலியின் முழக்கம் என அஞ்சின. பசு – ஆன்மா. ஆன்மாவின் அச்சத்தைப் போக்குதல். வேலும் மயிலும் உண்டே துணையாதலின் வேற்படை அச்சத்தைப் போக்கியது. உண்மை நெஞ்சே அஞ்சேல் – யாமிருக்க பயமேன் – அச்சத்தைப் போக்கும் சொற்கள்.

பூவையுங் கோவும் அசுணமும் நாகமும் பூம்பொறிக்கான்
சேவலுஞ் சித்திரம் போற்கேட் டுறங்கச் சிறார்ப்பொதுவர்
தூவருந் தீங்குழ லோசை வளர்க்கின்ற தொல்லைமுல்லைத்
தேவருந் தேடும் பொருள்போரி வேலன் திருவடியே. 23

**கருத்துரை**

நாகணவாய்ப் பறவையும், பசுவும், அசுணப்பறவையும் பாம்பும், அழகிய புள்ளிகளையுடைய காட்டுக் கோழியும் (சேவலும்) ஓவியம் போல அசையாது கேட்டு உறங்கும்படி, ஆயர்குலச் சிறுவர்கள் குற்றமற்ற இனிய மூங்கிலில் ஆன குழலோசையை இசைக்கின்றனர். தொன்மையான முல்லை நிலம் சூழ்ந்த திருப்போரூரில் எழுந்தருளிய வேலினை உடைய கந்தப் பெருமானது திருவடியை, அடியார்கள் மட்டும் அல்லாது தேவர்களும் விரும்பித் தேடும் ஒப்பற்ற பொருளாம்.

**அரும்பதவுரை**

பூவை – நாகணவாய்ப்பறவை. கோ – பசு. கான் – காடு. பொதுவர் – இடையர், ஆயர். தூ – தூய்மை.

**விளக்கவுரை**

இசை நூலில் இயம்பிய இலக்கணம் அமைந்த வேய்ங்குழலாதலின் "தூவருந் தீங்குழலோசை" என்றார். "குழலன், கோட்டன்" என்னும் நக்கீரர்

வாக்கால் முருகனுக்குரிய வேய்ங்குழலினை இடைச்சிறுவர்கள் இசைத்தனர். "குழலோசை வளர்க்கின்ற" செயலாயிற்று. திருவடியினை அடியார்கள் மட்டும் அல்லாது "தேவர்கள் தேடும் பொருளாயிற்று" தேவரும் – உம்மை உயர்வு சிறப்பும்மை.

கட்டான் நிரம்பி யகவிதழ் கீண்டெழு கஞ்சமுடன்
முட்டா டுவைத்திட மேதி தெறித்தொளிர் முத்தையன்னப்
புட்டான் சினையென்ற ணைக்கின்ற போரிப் புனிதச்செவ்வேள்
மட்டாருஞ் சேவடி தொட்டால் எமக்குநல் வாழ்வுளமே 24

**கருத்துரை**

தேன் நிரம்பிய அகவிதழைக் கிழித்து தெவிட்டுமளவிற்கு சுவைத்த வண்டு தாமரை மலரோடு முள்செறிந்த தாமரைத் தாளை துவைத்திட்ட பெருமைகளும், ஒளிவீசும் முத்தினை அன்னப் பறவையானது தன் முட்டையென எண்ணி அணைத்துக் காக்கின்ற திருப்போரூரில் எழுந்தருளிய புனிதத் தன்மையுடைய கந்தவேளது மணம் நிரம்பிய திருவடியைத் தொட்டு வணங்கினால் மனமே ! அதுவே நமக்கு நல்வாழ்வாகும்.

**அரும்பதவுரை**

கட்டான் – கள்+தான். மட்டார் – மணம்நிறைந்த. புட்டான் – புள் + தான் முட்டாள் – முள் + தாள்.

**விளக்கவுரை**

வண்டுகள் உண்ண வேண்டிய தேனினை உண்ணாமல் இருந்தன. ஆதனால் எருமைகள் தாமரை மலரைக் கிழித்தெறிந்தன. முத்தினை அன்னப்பறவை தன் முட்டையென எண்ணி அடைகாத்து நின்றது. மயக்கவணி – அடியார்கள் பலரும் மாயையின் காரணமாக தாம் இன்னது செய்வது என அறியாமல் மயக்க முற்றுள்ளனர் என்பது குறிப்பு. திருவடி வழிபாடே சிறந்தது. அதுவே நல்வாழ்வு ஆகும்.

மடுப்ப மயக்கிடை கொண்டேகு நெஞ்சினை மாற்றிஎன்னை
எடுப்ப துனக்குக் கடன்ஐய னேஎழில் கூர்பழனத்
துடுப்பு முகக்கொழுச் செல்கின்ற சீதையி லூறியநீர்
கடுப்ப வனசப் பிழியூறும் போரியன் காங்கெயனே. 25

**கருத்துரை**

அழகு மிகுந்த வயலில் உடும்பு முகத்தைப் போன்று செல்கின்ற கொழு மீன் உழவு செய்யும் படைச்சாலின் வழியே சுரந்த நீரைப்போல தாமரையில் தேனூறும் திருப்போரூர் தலத்தில் கங்கை நீரில் தோன்றிய கந்தக் கடவுளே பாசமாகிய மயக்கத்தில் கொண்டு செலுத்துகின்ற மனத்தை மடை மாற்றி என்னைக் காப்பது அருட்கடலாகிய நினது கடமையாகும்.

**அரும்பதவுரை**

மடுப்ப – மடுவாகிய நீர். கடனைய – கடல் அனைய, கடமை. எழில்கூர் – அழகுவாய்ந்த கூர் – உரிச்சொல். பழனம் – வயல். உடும்பு – உடுப்பு – வலித்தல் விகாரம். கொழு – மீன் வகை. உடும்பு போன்ற தோற்றமுடையது. சிதையில் ஊறிய நீர் – குளிர்ச்சி பொருந்திய நீர், படைச்சாலின் வழியே செல்லும் நீர் வனசப்பிழி – தாமரைத்தேன். கொழுமீன் – உடும்பு முகத்தைப் போன்றது. உவமையணி. காங்கேயன் – கங்கையில் தோன்றியவன். கடனையனே – கடல் அனையனே, கடமையன்றோ. கடுப்ப – உவமஉருபு.

**விளக்கவுரை**

படைச்சாலின் வழியே சென்ற நீர் தாமரைத்தேன் போன்றது. குளிர்ந்த இனிமையான நீர் என்றால் வழிந்தோடும் மழைநீரை மதகில் தேக்கிய பின்பு வாய்க்கால் வழியே பயிர்கட்கு நீரைப்பாய்ச்சுதல் உழவரது இயல்பு. அதுபோல பாசமாகிய நீரை நெறிப்படுத்தி உயிர்களைச் செலுத்துதல் கந்தனது கடமை என்று கூறினார். "கடன் + ஐயனே" என்று பிரித்துப் பொருள் காண்க.

பச்சைக் குடைதிருப் புந்தகைப் பாசடை யூடுருவ
மெச்சக் கடைசியர் சேல்பாயும் போரி விசாகன்எங்கோன்
கொச்சைக் சிறியனை யிந்நாளும் பண்ணிய கோகனகத்
தச்சற் கினியெனைப் பண்ணக் கொடான்இது சத்தியமே 26

**கருத்துரை**

பசுமையான குடையைத் திருப்பும் தன்மை போன்று பசுமையான இலைகளினிடையே துள்ளி விளையாடுகின்ற மீன் போன்ற கண்களையுடைய மருதநிலப் பெண்கள் யாவரும் உயர்வாகக் கூறும்படியான புகழைப் பேசும் திருப்போரூரில் எழுந்தருளிய விசாகப் பெருமான் எம் தலைவன் என்றனர். எனது இழிவான சொற்களைப் பேசும் சிறியேனை இந்நாள் வரையிலும் பிறவியை அளித்துக்காத்தவன் என்றனர். இனிமேல் தாமரையில் குடிகொண்டருளும் நான்முகனாகிய தச்சனுக்கு இனி என்னை மீண்டும் பிறவியில் தொழிற்படுத்த ஒப்புக் கொள்ளமாட்டான். இது சத்தியம் என்றனர்.

**அரும்பதவுரை**

பச்சைக்குடை – தாமரைஇலை. பாசடையான இலை. பசுமை பண்புத்தொகை. ஊடுருவ – துள்ளி விளையாட கடைசியர் – மருதநிலப் பெண்கள். சேல் – கண்கள் மீன்கள். மெச்ச – உயர்வாகப்பேசுதல். கொச்சை – இழிவான சொற்கள். பண்ணிய – தொழிற்படுத்திய கோகனம் – தாமரை. தச்சன் –நான்முகன்.

**விளக்கவுரை**

மருதநிலப்பெண்கள் மீன்போன்ற கண்ணினை உடையவர்கள். கயல் – மீன்கள். இருவருமே தாமரை இலையைத் திருப்புபவர்கள். பச்சைக்குடையைத்திருப்புவது போன்று இருந்தன. அப்பெண்கள் கொச்சையான இழிசொற்களைப் பேசுபவர்கள். யானும் அவ்வாறே. ஆதலின் “கொச்சைச் சிறியனை” என்றார். இதுநாள் வரையிலும் பிறவியில்

அகப்பட்டு உழலும் தன்னை, இனிப் பிறவா நெறியருளுவான் ஆதலின் "சத்தியம்" என்றார். நான்முகனைத் "தச்சன்" என்றார். இதனால் கந்தப்பெருமானை "உயிர் திருப்பு நாயகன்" என்று பாம்பனடிகளார் வாக்கு நினைவு கூறத்தக்கது.

விருந்துண்டு பின்னைக் குபசாரஞ் செய்யும் விதத்தின்நத்துப்
பொருந்துஞ் சரோருகத் தேனுண்டு முத்தமிழ் போரியில்ஓர்
மருந்துண்ட தன்பெயர் செவ்வே ளஃதென் மலப்பிணியுந்
திருந்து முடற்பிணி தன்னையும் போக்கிடுஞ் சித்தமிதே. 27

**கருத்துரை**

திருமகள் இல்லத்தில் விருந்தினை உண்டபின்னர் மீண்டும் அத்திருமகட்கே உபசாரம் செய்யும் தன்மையைப்போன்று, சங்கினங்கள் அழகிய தாமரை மலரில் உள்ள தேனினை உண்டு மீண்டும் அவ்விடத்திலேயே முத்துக்களைத் தரும் திருப்போரூர் எனும் திருத்தலத்தில் ஒரு மாமருந்து உள்ளது. அம்மருந்தின் பெயர் கந்தசுவாமி எனும் செவ்வேள். அப்பெருமான் எனது அகநோயாகிய மும் மலங்களையும் நீக்கிப் பிறவி நோயையும் நீக்க வல்லவன். எனது வாத பித்த, சிலேத்துமம் என்னும் மூன்று நாடிகளை ஆராய்ந்து, உடல் நோயையும் போக்க வல்லன். இம்மொழியே உறுதியான உண்மையாகும்.

**அரும்பதவுரை**

உபசாரம் – வழக்கு, வழிபாடு, ஊழியம். சரோருகம் – தாமரை. மலப்பிணி – பிறவி நோய். உடற்பிணி மூவகை நாடிகளின் மாறுபாடுகளால் ஏற்படும் நோய். சித்தம் – உள்ளம், உறுதி, உண்மை. நத்து –சங்கு

**விளக்கவுரை**

அகநோயை "மலப்பிணி" என்றும், புறநோயை "உடற்பிணி" என்றும் கூறினார். நோய்க்கு மாமருந்து முருகனே. அதன் பெயர் "செவ்வேள்" என்றார். பரிபாடல் என்னும் நூலில் முருகனை

“செவ்வேள்” என்றே குறிப்பிடுவர். சரோருகத் தண்டு – தாமரைத்தண்டு. அந்நீரை உண்டு முத்து சொரிதல் சங்குகட்கு இயல்பு. இதனை “உபசாரம்” என்பர். “உபகாரம்” எனினும் ஆம். தாமரை என்றதால் “திருமகள்” எனப் பெறப்பட்டது. சங்கினங்கள் – உயிரினங்கள். ஆன்மாக்களைக் குறித்தது.

தண்டா மரையில் அனப்பே டுறவது தன்னருகே
வெண்டா மரையிரண் டாலுதல் வாணிக்கு வெண்கவரி
கொண்டார வீசுதல் போலுறும் போரிக் குகன்இருதாள்
கண்டாலும் இன்பக் கடல்வந்து கோக்குங்கருத்தினையே 28

**கருத்துரை**

குளிர்ச்சி பொருந்திய வெண்தாமரையில் பெண் அன்னப்பறவை அமர்ந்திருக்க, அப்பறவையின் பக்கத்தில் வெண்மையான இரு தாமரை மலர்கள் அசைதலைப் போன்று. வெண்தாமரையில் எழுந்தருளியிருக்கும் கலைமகளுக்கு வெண்ணிறம் பொருந்திய சாமரம் கொண்டு வேகமாக வீசுதல் போன்று இருந்தன. அத்தகைய திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் குகப் பெருமானது இரு திருவடித் தாமரைகளை அகத்திலன்றி புறத்தே கண்டாலும் பேரின்பக் கடல் தோன்றி நம் உள்ளத்தினைக் கொள்ளை கொள்ளும் தன்மையதாம்.

**அரும்பதவுரை**

அன்னப்பேடு – பெண் அன்னம். உற –தங்க. ஆலுதல் – அசைதல். வாணி –கலைவாணி. கவரி – சாமரம். ஆரவீசுதல் – வேகமாக வீசுதல். கோக்கும் – கொள்ளை கொள்ளும்.

**விளக்கவுரை**

பெண் அன்னப்பறவையைக் கலைமகளாகவும், தாமரை மலர்கள் அசைதல் வெண்கவரி வீசுதல் போலவும் ஒப்புமை கூறினர் – உவமையணி. குகனிருதாள் – திருவடி, பர. அபர ஞானம் என்பர். இன்பக்கடல் – பேரின்பமாகிய கடல் – உருவகம்.

வண்டுகிண் டக்கஞ்சம் விண்டுதேன் தேன்சிந்த வால்வளைகள்
கண்டயின் றின்புறும் போரூர் முருகன் கழலிணைக்கே
தொண்டுவந் தின்புறு வோர்பாத தாமரைத் தூளென்சென்னி
கொண்டுவந் தேன்மலம் விண்டேன் பரகதி கூடினனே. 29

**கருத்துரை**

வண்டுகள் தனது மூக்கினால் கிளறுவதால் தாமரை மலர்கள் விரிந்தன. குளிர்ச்சி பொருந்திய தேனினைச் சொரிந்தன. வெண்மையான சங்குகள் அத்தேனைப் பருகி மகிழ்ந்தன. அத்தகைய போரூர் முருகனது திருவடிகட்கு தொண்டு செய்து மகிழ்ச்சி அடைவோரது திருவடித் தாமரையின் துகள்களை எனது தலைமேல் வைத்து மகிழ்ச்சியடைந்தேன். மும்மலங்கள் நீங்கின, மேலான வீடுபேற்றைப் பெற்றேன்.

**அரும்பதவுரை**

கிண்டு – கிளறுதல். கஞ்சம் – தாமரை. விண்டு – மலர்தல். வால்வளை – வெண்சங்கு. அயின்று –பருகி. தூள் – துகள், தூசி. சென்னி – தலை. பரகதி – வீடுபேறு

**விளக்கவுரை**

வண்டு கிண்டுவதால் தாமரை மலர்ந்தது. தொண்டர்கள் தொண்டு செய்வதால் மகிழ்ச்சி அடைந்தனர். ஆன்மாக்களாகிய வெண்சங்கு தேனினைப் பருகியது. தொண்டர்கள் பாத கமலத்தைச் சென்னி தாங்கியதால் ஆணவமலம் அகன்றது. அதனால் வீடுபேறு கிட்டியது. "தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே" ஔவையின் வாக்கு. தொண்டரடிப் பொடி ஆழ்வாரை, வைணவ அடியார் என்பர். "திருவடி என் திருமுடி மேலன" என்று திருவடியின் சிறப்பை இராசராசசோழன் காலக் கல்வெட்டு கூறும்.

கன்னிய ராடிக் கழித்தகத் தூரி கயல்மணக்கும்
மன்னிய வாவி திகழ்சம ராபுரி மாமயிலோன்
பொன்னியல் கிண்கிணித் தாளையும் தோளையும் போற்றுவையேல்
உன்னிய யாவு முறுநெஞ்ச மேஉண்மை உண்மையிதே 30

**கருத்துரை**

கன்னிப்பெண்கள் நீராடிய பின்னர் எஞ்சிய நீரில் கஸ்தூரி மணம் வீசியதால் மீன்களும் அம்மணத்தைப் பெற்றன. அத்தகைய குளத்தினை உடைய சமராபுரி எனும் திருத்தலத்தில் உள்ள கந்தப் பெருமானின் பெருமை வாய்ந்த வாகனமாகிய பெரிய மயிலையும், பொன்னால் செய்யப்பட்ட சதங்கை அணிந்த திருவடிகளையும், பன்னிரு திருத்தோள்களையும், மனமே வணங்கி மகிழ்வாயாக ! அவ்வாறு செய்தால் நீவீர் எண்ணிய எண்ணம் கைகூடும். இதுவே பேருண்மையாம்.

**அரும்பதவுரை**

கத்தூரி – கஸ்தூரி (நறுமணப்பொருள்) கயல் – மீன். கிண்கினி – சதங்கை ஒலி. உன்னிய – நினைத்த உண்மை. உண்மை – அடுக்குத் தொடர்.

**விளக்கவுரை**

தாளையும் தோளையும் போற்றுதல் மரபு. தாள் –திருவடி. தோள் பன்னிரு தோள். முருகனது வடிவமே தமிழின் எழுத்துக்கள்.

“விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுருகா வெனுநாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணை யவன்பன் னிருதோளும் பயந்ததனி
வழிக்குத் துணை வடிவேலுஞ் செங்கோடன் மயூரமுமே”

–கந்தரலங்காரம் – 70.

உமாபதி சிவனாரும், ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகளும் “நெஞ்சுவிடு தூது” என்னும் நூலில் தமது நெஞ்சையே தூது விடுத்தனர். ஆதலால் “நெஞ்சமே” என்றார். உண்மை என ஒருமுறை கூறாது இருமுறை கூறினார். இதுவே பேருண்மையாம் என அடுக்கிக் கூறினர் என்க.

வள்ளைக் கொடிச்செவி சைவலக் கூந்தல் வனசமுகந்
தெள்ளூற்ற நீலக்கண் ணாம்பற்செவ் வாய்திக ழுந்திகிரிப்
புள்ளுக் குயமன்னப் பேட்டு நடையுடைப் பொய்கைமங்கை
நள்ளத் திகழ்கின்ற போரூர் விசாகனை நாடுள்ளமே 31

### கருத்துரை

வள்ளைக் கொடியைச் செவியாகவும், பாசியைக் கூந்தலாகவும், தாமரை மலரை முகமாகவும் தெளிந்த நீலமலரைக் கண்ணாகவும், ஆம்பல் மலரைச் செவ்வாயாகவும், சக்ரவாளப் பறவையைத் தனமாகவும், அன்னத்தின் நடையைத் தனக்குரிய நடையாகவும், கொண்ட பொய்கை எனும் அழகிய ஒரு பெண்ணை நட்பு கொள்ள விரும்பிய ஆடவரைப்போல திருப்போரூரில் வீற்றிருக்கும் விசாகப்பெருமானை மனமே நீ நாடி அடைவாயாக.

### அரும்பதவுரை

சைவலம் – பாசி, வனசம் – தாமரை. நீல – நீலமலர். திகிரிப்புள் – சக்கரவாளப்பறவை பேட்டு – பேடு – பெட்டை. நள்ள – நட்பு கொள்ள. பொய்கை – (நீர் நிலை) மலர்கள் பூத்துக்குலுங்கும்.

### விளக்கவுரை

பொய்கையைப் பெண்ணாகவும், மலர்களை அவயவங்களாகவும், கூறியதால் இப்பாடலில் உருவக அணி பயின்று வந்துள்ளது. மனமே – தேற்றேகாரம். நாயகன் நாயகி பாவம். ஆன்மா இறைவனை அடைய முயல்கிறது. குய்யம் – பெண்குறி. மங்கை – பெண். பொய்கையாகிய மங்கையை நாடாமல் கந்தனை நாடு என்று உள்ளத்திற்குக் கூறியமையால் சிற்றின்பத்தையொழித்து பேரின்பத்தை நாடு என்பது கருத்து. உள்ளம் – மனம். அந்தக்கரணமாம் – மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்காகும்.

கருப்புத் திரளை யறுத்துச் செரித்த கனைசகட
மருப்புப் பகட்டைக் கழையால் உழவர்கள் மாறுதொறும்
விருப்புற்ற முத்துத் தெறித்தொளிர் சாளர வீடுபுகுந்
திருப்பெற்ற போரிக் குகன்தாள்அறிஞர்க்குத் தித்திக்குமே. 32

### கருத்துரை

மருதநிலமக்கள் தாம் அறுவடை செய்த கரும்புக்கட்டினை மணி ஒலிக்கும் வண்டிகளில் ஏற்றி நல்ல கொம்புகளையுடைய எருமைகளைப்

பூட்டிக் கொண்டு சென்றனர். ஆலையில் இட்டு கரும்பு சாறு பிழிந்தனர். அவ்வாறு செய்யும் பொழுது யாவரும் விரும்புகின்ற முத்துக்கள் அதன் கணுக்களிலிருந்து வெளிப்பட்டு நின்றன. அம்முத்துக்கள் வீட்டு சன்னல்களில் ஒளிபுகும் தன்மையவாய் விளங்கின.

## அரும்பதவுரை

கரும்பு – கருப்பு – வலித்தல் விகாரம். கனை சகடு – மணி ஒலிக்கும் வண்டி. பகடு – எருமை. கழை – கரும்பு. சாளரம் – சன்னல்

## விளக்கவுரை

கரும்பின் கணுக்களிலிருந்து முத்து தோன்றுதல் இயல்பு – அவை ஒளியுடையவாய் விளங்கின. வீட்டு சன்னல்களின் வழியே ஒளிபுகும் தன்மையவாய் விளங்கின என்பதாம். அறிஞர் பெருமக்கட்கு பேரின்பமாய்த் திகழ்தலின் "தித்திக்குமே" என்றார். உருத் தெரியாக் காலத்தே எனத் தொடங்கும் திருவாசகப் பாடலில், "தித்திக்கும் சிவபதம்" என்றார். மருத நிலம் – வயலும் வயல் சார்ந்த இடம். இப்பாடலில் மருத நாட்டு வளம் கூறப்பட்டது.

கரண்டம் அடிக்கடி நீர்மூழ்கி யாங்குக் கயலெடுத்தே
மருண்டமென் னோக்கியர் முன்காட்டல் நுங்கள்மலர் விழிக்கு
வெருண்ட கயலன் றிதுபார்மின் என்று விளம்பலொக்குந்
தெருண்டவர் சூழ்திருப்போரூரின் தேவர் சிரோமணியே 33

## கருத்துரை

நீர் காக்கையானது அடிக்கடி நீரில் மூழ்கி அதிலுள்ள மீனைக் கொத்தி எடுத்ததைக் கண்டு மென்மையான பார்வையுடைய பெண்கள் மருட்சி கொண்டனர். அப்பெண்கள் முன்னர் தாமரை மலர் போன்ற கண்களுக்கு அச்சம் கொண்டவை மீன்களா? காணுங்கள் என்று கூறுவதைப்போன்று தேவர்கள் சூட்டிடும் சூளாமணியைக் காட்டினர். நூல் ஆய்வில் தெளிந்தோர் சூழ்ந்த திருப்போரூர் என்னும் தலத்தில் எழுந்தருளிய கந்தசுவாமிப் பெருமானே எனக் கூறினர்.

**அரும்பதவுரை**

கண்டம் – கழுத்து. கரண்டம் – நீர்காக்கை. கயல் – மீன். மருண்ட – மருட்சி கொண்ட. மலர்விழி – மலர்போன்ற கண்கள் உவமை. விழிமலர் – உருவகம் (விழியாகியமலர்) வெருண்ட – அச்சம் கொண்ட. விளம்பல் – கூறுதல். தேவர் சிரோன்மணியே – தேவர் சூட்டிடும் சூளாமணி

**விளக்கவுரை**

நீரில் மூழ்கி மீன்களைக் கொத்தி உணவாக உட்கொள்ளுதல் நீர்காக்கையின் இயல்பு. மனித வாழ்க்கையும் இவ்வாறே அமைந்துள்ளது. பெண்களின் மலர்போன்ற விழிகளைக் கயல்கள் என அச்சம் கொண்டனர். அச்சத்தைப் போக்கி சூளாமணியைச் சூட்டினர். பிறவி அச்சம் கொண்டவர் அடியார் பெருமக்கள். அச்சத்தைப் போக்குபவன் கந்தப்பெருமான் என்க.

காளைச் சலப்பெயர் நாயின மூழ்கக் கயமடுவில்
ஆளைப் பகட்டுறும் வாளைப் பகட்டினம் அம்பினிற்போய்ப்
பாளைக் கமுகின் மிடறறப் பாய்ந்துநெற் பண்ணைபுகுங்
கேளொத்த போரிக் குகனன்ப ரேயென் கிளைஞர்களே 34

**கருத்துரை**

நீர் நாயின் கூட்டங்கள் மேலெழுந்து மூழ்கமுடியாதபடி ஆழமாகிய நீரை உடைய மடுவில், ஆட்களை மயக்கும் வாளை மீன் கூட்டம் அம்பைப்போல மேலெழுந்து சென்று, பாளை பொருந்திய பாக்கு மரத்தின் கழுத்து முரியும்படி பாய்ந்தன. அதன்பின்னர் நெல்விளையும் வயலில் புகுந்து விளையாடியது. திருப்போரூரில் எழுந்தருளிய குகப்பெருமான் சரண் அடைந்தோர்க்கு உறவினரைப் போன்றவன். அப்பெருமானது அன்பர்களே எமது உறவினர் ஆவார் என்பதாம்.

**அரும்பதவுரை**

காளை – ஆண்மகன். சலப்பெயர் – நீரில் வாழும். கயமடு – ஆழமான நீர்நிலை. கமுகு – பாக்கு. மிடறு – கழுத்து. கேள் – கேண்மை, நட்பு. கிளைஞர் – சுற்றத்தினர்.

**விளக்கவுரை**

நீர் நாய் போன்று எவ்வித முயற்சியும் பயிற்சியும் இன்றி உள்ளோம். வாளை மீன் போன்று முயற்சியும் பயிற்சியும் பெற்றால் நெல் வயலைச் சென்றடையலாம். இறைவனைச் சென்றடைய முயற்சியும் பயிற்சியும் தேவை என்பது குறிப்பு. கந்தப்பெருமானது திருவடியைச் சரணடைந்தோர் யாவரும் உறவினர்களே என்பதைக் "கிளைஞர்களே" என்றார்.

கருக்கடல் நாயடி யேன்புகு தாவகை காத்துமுத்திப்
பெருக்குறு மின்பத் திருத்துகண் டாய்பெரு நீர்க்கரையின்
வருக்கை வெடித்தெழு செஞ்சாற்றுச் சேற்றில் வழுக்கிநத்துக்
குருக்கொளும் முத்துமிழ்போரூர்ச் சடானனக் கோக்கொண்டலே. 35

**கருத்துரை**

பெருமை வாய்ந்த நீரை உடைய ஆற்றங்கரையில் உள்ள பலாக்கனிகள் வெடித்துச் சிதறின. சிதறிய பலாச்சுளைகள் ஊறியதால் சிவந்த நிறமுடைய சேற்றில் கருக்கொண்ட சங்குகள் வழுக்கி விழுந்தன. வெண்ணிறம் பொருந்திய முத்தினை வெளிப்படுத்தின. அத்தகைய போரூரில் எழுந்தருளிய ஆறு திருமுகங்களை உடைய கருணை மேகமே. மீண்டும் பிறவியாகிய கடலில் புகுதாவாறு காத்து வீடுபேறு எனும் பேரின்ப முத்தியை அளித்து ஆட்கொள்வாயாக !

**அரும்பதவுரை**

கருக்கடல் – பிறவிக்கடல். வருக்கை – பலா. செஞ்சாற்றுச் சேற்றில் – சிவந்த நிறமுடைய சேற்றில் நத்து – சங்கு. குரு – ஒளி.

**விளக்கவுரை**

முகில் கருணை பொழியும் மேகமாதலின் "கொண்டலே" என்றார். கடலில் மேகம் செல்வது இயல்பு எனினும் பிறவிக்கடலில் புகா வண்ணம் காத்தருள வேண்டும். ஆதலால் "புகுதா வகை காத்து" என்றார். முத்தியாகிய இன்பக்கடலில் மூழ்க வேண்டும் என்பதனை "பெருகுறும் இன்பத் திருத்து கண்டாய்" என்றார்.

வீட்டின்ப நாடி யிருப்போர் நமக்கும் விடயசுக
நாட்டங்கொண் டாங்கவர் போலிருப் போர்க்கும் நலனுறவே
காட்டும் உவமைய தாக்கொக்கு நீர்மடைக் கண்ணிலகுந்
தீட்டும் புகழ்கொண்ட போரூரன் வேல்சுரர் தேவதையே 36

**கருத்துரை**

வீடு பேற்றினை நாடியிருக்கும் தவத்தினையுடைய யோகியர்கட்கும், சிற்றின்பத்தையே விருப்பமாகக் கொண்டு நாடியிருக்கும் போகர்கட்கும் நலத்தையே நல்குவான் கந்தப்பெருமான். அதற்கு உவமையாகப் புலவர்கள் கூறுவது யாதெனில் கொக்குகள் நீர் நிலையின் கண் மீனின் வருகையை நாடி அசைவற்று இருப்பதைப் போன்று இருப்பர். புலவர்கள் போற்றும் புகழ் வாய்ந்த திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் இறைவன் திருக்கையில் ஏந்திய வேல் தேவர் குலத்துக்கு தெய்வமாகும்.

**அரும்பதவுரை**

நாடியிருப்போர் – தக்க தருணம் பார்த்து இருப்போர். வீட்டின்பம் – பேரின்பம். விடயசுக நாட்டம் – சிற்றின்ப வேட்கை. நீர்மடை – நீர் நிலை. இலகும் – விளங்கும். தேவதை – தேவர்கட்குத் தலைவர், தேவசேனாதிபதி

**விளக்கவுரை**

யோகியர்கட்கும், போகியர்கட்கும் நலத்தையே தருவான் முருகப் பெருமான் என்பதனை " நலனுறவே" என்றார். கொக்கு போல நாடியிருத்தல் உவமை. கொக்கொக்க கூம்பும் பருவத்து – என்னும் குறளால் உணர்க. தேவர்களது பெரும்துன்பத்தைப் போக்கி பாதுகாத்தது முருகனது கையில் உள்ள வேலாதலில் "வேல் தார் தேவதையே" என்றார். தேவர்கட்கு மட்டுமன்றி ஏனையோர்க்கும் குல தெய்வமாக விளங்கி வருகிறான் என்றும் கூறலாம்.

வாவிக் கரைக்கமு கேய்கொக்கு நீழல் வயங்குதெண்ணீர்
தாவிக் கயலதைக் கண்டே வெருவுதல் தன்கனவின்
மேவுற்ற காட்சி நனவிற்கண் டானின் விளங்கலுறும்
பூவிற் றிருத்திகழ் போரூர்க் குகன்பதம் போற்றுள்ளமே. 37

**கருத்துரை**

நீர் நிறைந்த தடாகத்தின் கரையிலுள்ள பாக்குமரம் தெளிந்த நீரில் உள்ள கொக்கின் நிழலைப் போல விளங்கித் தோன்றுகிறது. அதைக்கண்ட மீன் அச்சமுற்று பாக்கு மரத்தின் மீதே தாவுகிறது. அந்நிகழ்ச்சி நிழலைக்கண்டு அஞ்சுதல். தனது கனவில் வந்த காட்சியை நனவில் கண்டாற் போன்று விளங்குகிறது. தாமரை மலரில் திருமகள் வசிக்கும் திருப்போரூரில் உள்ள முருகக் கடவுளது திருவடியை மனமே போற்றி வணங்குவாயாக.

**அரும்பதவுரை**

வாவி – குளம். கமுகு – பாக்கு. தெண்ணீர் – தெளிந்த நீர். கயல் – மீன். வெருவுதல் – அஞ்சுதல். பூ – தாமரை. நிழல் – நீழல் நீட்டல் விகாரம். தெண்ணீர் – பண்புத்தொகை.

**விளக்கவுரை**

முருகக் கடவுளது திருவடியை வணங்கினால் இம்மைக்குரிய பொருட் செல்வத்தையும், மறுமைக்குரிய மெய்ஞ்ஞானத்தையும் பெறலாம் என்பதை "பூவில் திருத்திகழ் போரூர்" என்றார்.

கமுக மரத்தைக் கொக்கு என்று கயல்மீன் எண்ணுதல் கனவு. மீண்டும் அக்கமுக மரத்தையே நாடிச் செல்லுதல் நனவு. இதனையே சிதம்பர சுவாமிகள்

"கனவிலே கண்ட காட்சிகள் யாவுமக்
கனவிற் பொய்யெனக் கண்டுத னைக்கண்டோன்
பினையும் அந்தக் கனாவினை மெய்யெனப்
பேணுமாறும் மயங்கினென் பேதையேன்" – சித்தொளி –3

எனக் கூறுகிறார்.

பச்சை நிறத்த நிறைநீர்க் குடங்கள் பலசுமந்தே
உச்சியி லுற்ற கதிரோனுக் கீயு முயர்ந்துளதெங்
கெச்ச மறச்செறி போரூர்ச்செவ் வேளை யிறைஞ்சிநினைப்
பிச்சநெஞ் சேயடு கின்றனன் பாரென்ப்ர தாபத்தையே. 38

**கருத்துரை**

பசுமை நிறம் பொருந்திய நீர் நிறைந்த குடம் போன்ற தென்னங்குலைகள் பலவற்றையும் தலையில் சுமந்து சோலைகள் நின்றன. ஆகாயத்தின் உச்சி வேளையில் வெப்பம் தரும் சூரியனுக்குத் தரம் உயர்ந்த தென்னை மரங்கள் குறைவறச் செறிந்திருந்தன. திருப்போரூரில் எழுந்தருளிய முருகக் கடவுளை (மனமே) வணங்கி நினைக்கும் நினைப்போடு விருப்பத்தையும் பூர்த்தி செய்வான். அத்தகைய பெருமையைக் காண்பாயாக.

**அரும்பதவுரை**

குடங்கள் – தென்னங்குலைகள். கதிரோன் – சூரியன். எச்சமற – குறைவற. இறைஞ்சி – வணங்கி. அடுகின்றனன் – பூர்த்தி செய்வேன். பிரதாபம் – பெருமை. இச்ச நெஞ்சே – விருப்பமுடைய மனமே.

**விளக்கவுரை**

தன்னை அடைந்தவர்க்கு பேரின்பம் அளிப்பவன். போரூர் செவ்வேள் – கந்தப்பெருமான். தென்னங்குலைகள் சூரியனது தாகத்தைப் போக்கியது போல அடியார்களது துன்பத்தையும் போக்குவான் என்பது கருத்து. "கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் குளிர் தருவே, தரு நிழலே" என்பார் வள்ளலார்.

சாறூற் றெழுந்து கணுவுடைத் தோடுந் தழைக்கரும்பை
வீறேற்று வாழைக் குலையொடும் ஆசினி வீழ்ந்தொடித்துச்
சேறாக் கியவயற் போரூர் முருகன்நந் தீதகற்றிப்
பேறாக் கருணைசெய் தேநெஞ்ச மேதரும் பேரின்பமே. 39

**கருத்துரை**

பழச்சாறுகள் ஊற்றெடுத்துச் செல்லவும், கணுவினை உடைத்து ஓடும் தழையை உடைய கரும்புச்சாறு பெருக்கெடுத்து ஓடவும், நிகரற்ற வாழைக்குலையோடும் பலாப்பழமும் ஒடித்து, சேறாக்கிய வயல்சூழ்ந்த திருப்போரூரில் எழுந்தருளியுள்ள கந்தக் கடவுள் பிறவித்துன்பத்தினை

ஒடித்து யாம் பெரும்பேறாகக், கருணையினால் திருவருள் செய்து பேரின்பத்தைத் தந்தருளுவான். மனமே அத்தகைய இறைவனைச் சென்று அடைவாயாக.

**அரும்பதவுரை**

சாறு – பழச்சாறு. கணு – கரும்பின் கண் உள்ள. வீறு – பெருமை. ஆசினி – பலா. தீது – துன்பம்

**விளக்கவுரை**

கரும்பு, வாழை, பலா – மூன்று பழச்சாறுகளும் "சேறாக்கிய வயற் போரூர்" என்றார். மருதநில வளம் கூறப்பட்டது. பழச்சாறு இன்பம் தருதலைப் போல முருகனை அடைந்தோர்க்கு பேரின்பம் தருவான் என்க. துன்பம் நீக்கி, கருணை மழை பொழிந்து பேரின்பம் தருவான் என்பதனை "தீதகற்றி பேறாக் கருணை செய்தே" என்றார். நெஞ்சமே ! "பேரின்பமே தரும்" எனப் பொருள்காண்க.

பவளக் கொடியிற் பிணித்தூசல் புன்னையிற் பார்வைமயற்
குவளைக்கண் கற்கு மடமாத ராடவக் கோடரும்பைத்
தவளத் தரள மழைபோ லவர்மெய் தனிற்சொரியுந்
திவளுற்ற போரிக் குமரேசன் என்குல தேவதையே 40

**கருத்துரை**

பவளநிறம் போன்ற கொடியினால் புன்னை மரக் கொம்பில் ஊஞ்சலைக் கட்டி ஆடவும், குவளை மலர் போன்ற கண்களால், மயக்கத்தினை அளிக்கும் இளமையான பெண்கள் ஆடவும், அப்புன்னை மரத்தின் கொம்பானது அரும்பு போன்ற வெண்முத்துக்கள் மழை போல் அப்பெண்களது உடம்பில் சொரியும் தன்மை உடைய ஒளிபொருந்திய திருப்போரூரில் எழுந்தருளிய முருகக் கடவுள், எமக்குக் குல தெய்வமாவான் என்க.

**அரும்பதவுரை**

பவளக்கொடி – பவளநிறம் போன்ற கொடி. பிணித்து – கட்டி. புன்னை – மரம். குவளைக்கண் – குவளை மலர் போன்ற கண்.

உவமைத்தொகை. தவளத்தரளம் – வெண்முத்து. திவளுற்ற – ஒளிபொருந்திய. கோடரும்பு – கொம்பில் உள்ள அரும்பு.

விளக்கவுரை

புன்னை மரத்தில் ஊசல் ஆடிய பெண்கள் மேல் முத்துக்கள் மழையாகப் பொழிந்தன. முருகக் கடவுள் அடியார்களிடத்து கருணை மழை பொழிந்து அருள் சுரந்து வீடு பேற்றைத் தருவான் என்றார். முல்லை நிலத்தின் சிறப்பு இப்பாடலில் கூறப்பட்டது.

வல்லைத் துரத்த முலைநுளை மாதர் வளையெறியப்
பல்லைத் திறந்துறு மிக்கவி தாலப் பழமிகுக்கு
தொல்லைத் திருத்திகழ் போரூர்க் குகன்பதஞ் சூடும்சென்னிக்
கில்லைப் பிரமன் துயருறக் கீறும் எழுத்துக்களே. 41

கருத்துரை

சூதாடும் கருவியைப் போன்ற தனத்தையுடைய நெய்தல் நிலப்பெண்கள் தாம் அணிந்துள்ள சங்கினால் ஆன வளையல்களை குரங்கின் மேல் எறியவும், பற்களைத் திறந்து காட்டும் குரங்குகள் பனம்பழத்தை அப்பெண்களுக்கு எதிராக வீசும் தன்மையும், தொன்மையுமான திருப்போரூரில் எழுந்தருளிய முருகக் கடவுளது திருவடியைத் தலையில் சூடும் அடியார்க்கு நான்முகன் பிறவித் துன்பமாகிய தலையெழுத்தை அவன் எழுத மாட்டான் என்பதாம்.

அரும்பதவுரை

வல்லை – சூதாடும் கருவி. நுளை மாதர் – நெய்தல் நிலப்பெண்கள். வளை – சங்கினால் ஆன வளையல். கவி – குரங்கு. தாலப்பழம் – பனம்பழம். சென்னி – தலை. கீறும் – எழுதும்.

விளக்கவுரை

குரங்கின் செயல்கள் – வளையலை எறிந்த பெண்களுக்கு எதிராக பனம்பழத்தைப் பறித்து ஏறிந்தன. அடியார்கள் எச்செயலைச் செய்தாலும் மீண்டும் அவ்வினை தம்மையே மீண்டும் வந்து சேரும் என்பது குறிப்பு. குரங்கு – மனித மனத்துக்கு உவமை. முருகனது திருவடியை வணங்கும்

அடியார்க்கு பிறவித்துன்பம் இல்லை. நான்முகன் எழுதும் (லிபி) தலைஎழுத்தை மாற்றுவான் என்பது குறிப்பு.

காடைக் கொதுங்கிட பார்ப்புகள் வெள்ளை வனசங்கள்மேல்
தேடிப் பெடையனந் தன்பா லணைத்துறந் தீதில் நெய்தல்
நீடத் திகழ்கின்ற போரூர் விசாகன் நிமலபதம்
நாடிக் களிப்பவர்க் குண்டோ துயரெனும் நாமங்களே. 42

**கருத்துரை**

வாடைக்காற்றுக்கு அஞ்சி ஒதுங்கிய தமது குஞ்சுகளை வெண்தாமரை மலரின் மேல் உள்ள அன்னப்பறவைகள் தேடி அவற்றைத் தன்பால் அணைத்துக் கொள்ளும். தீமையில்லாத நெய்தல் நிலத்தில் மிகவும் விளங்குகின்ற திருப்போரூரில் விசாகப் பெருமானது குற்றமற்ற பாதத்தை நாடுபவர்க்கு பிறவித் துன்பம் நீங்கிப் பேரின்பம் அடைவர்.

**அரும்பதவுரை**

வாடை – வடக்கிலிருந்து வீசும் காற்று . பார்ப்புகள் – குஞ்சுகள். வனசம் –தாமரை. பெடை – பெட்டை. நிலமபதம் – குற்றமற்ற திருவடி. நாடி – ஆராய்ந்து. களிப்பர் – பேரின்பம் பெறுவர். துயர் – துன்பம்

**விளக்கவுரை**

அன்னப்பறவை வாடைக்காற்றால் வாடும் தம் குஞ்சுகளைத் தன்பால் அணைத்துக் கொள்கின்றன. அதுபோன்று முருகப் பெருமான் பிறவித் துன்பத்தால் வாழும் ஆன்மாக்களைத் தன்பால் அணைத்து பேரின்பம் அளிப்பான். இறைவன் திருவடி மலமற்றது. ஆதலின் “நிமலபதம்” என்றார். துயர்தீரும் நாமங்கள் உண்டோ என்பது வினா. நாமம் எனக்கூறாது நாமங்கள் என்றார். “முருகா” எனும் நாமங்கள் அருணகிரிநாதர் வாக்கு.

செக்கர்க் கிடையின் உடுக்கூட்ட மென்னத் திரைகளினால்
தொக்கப் படுந்துகிர் வண்டலின் மீது கரிமுகங்கள்
கக்கப் படுமுத் தொளிருந்தென் போரியிற் காங்கெயனைப்
பக்கத் துடன்பணி வாரவ ரேசுக பாரணரே. 43

**கருத்துரை**

சிவந்த வானத்திடையே விண்மீன் கூட்டங்கள் விளங்குதலைப் போன்று வீசும் அலைகளினால் நெருங்கிய பவள நிறத்தையுடைய சேற்றின் மேல், சங்குகளால் வெளிப்படுத்தப்படும் முத்துக்கள் விளங்குகின்றன. தென்பால் உள்ள திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகனை அன்போடு வணங்கும் அடியார்களுக்கு இக, பர சுகங்களை அருளுவான்.

**அரும்பதவுரை**

செக்கர்க்கிடையின் – சிவந்த வானத்திடையே. உடு – விண்மீன். திரை – அலை. துகிர் – பவளம். வண்டல் – சேறு. சுரி முகங்கள் – சங்கினங்கள். கக்கப்படு – உமிழப்படும், வெளிப்படுத்தப்படும். காங்கேயன் – கங்கையில் தோன்றியன். சுகாபரணர் – இக பர சுகங்களைப் பெறுவர். பக்கத்துடன் – அன்புடன்.

**விளக்கவுரை**

செவ்வானத்தைச் சேறாகவும், விண்மீன் கூட்டங்களை முத்துக்களாகவும், உவமை கூறினார். உவமையணி. அன்புடன் கந்தனை வணங்குவர் இக, பர நலன்களைப் பெறுவார் என்பதனை, “பக்கத்துடன் பணிவார் அவரே சுகாபரணரே” என்றார். இக, பர சௌபாக்கியம் அருள்வாயே – திருப்புகழ்.

வண்டனை யாக்கொண்டு கண்தூங்கும் பூங்குழல் மாதரையே
கண்டனை யாயினுங் காலமுண் டோகடை யேன்றனக்கே
ஞெண்டினங் கேதகைத் தாதரித் துண்டறல் நீடுபொய்கைத்
தண்டுறை ஞெண்டுடன் ஆடிடும் போரிச் சரவணனே. 44

**கருத்துரை**

ஆண் நண்டினங்கள் தாழை மலரில் உள்ள மகரந்தத்தை உண்டு, குளிர்ந்த நீர்த்துறையில் பெண் நண்டோடு விளையாடும் திருப்போரூர் தலத்தில் எழுந்தருளியிருக்கும் சரவணப் பெருமாளே. வண்டுகள் மொய்க்கும் மலர்களை தலையணையாகக் கொண்டு கண்ணுறங்கும் மென்மையான கூந்தல்களையுடைய பெண்களைக் கண்டு தாயாகக் கருதும் காலம் நாயினும் கடைப்பட்ட எனக்கும் உண்டோ ?

**அரும்பதவுரை**

அனை – அன்னை இடைக்குறை. வண்டனை – வண்டுகள் மொய்க்கும் மலரை தலையணையாகத் கொண்டு. மாதர் – பெண்கள். நெண்டு – நண்டு. கேதை – தாழை. தாது – மகரந்தம். தண்டுறை – குளிர்ந்த நீர்த்துறை

**விளக்கவுரை**

பெண்களைத் தாயாகத் கருதும் பக்குவம் வந்திடில் வீடு பேற்றிற்கு வழிவகுக்கும் ஆதலின் "கண்டனை யாயினுங் காலமுண்டோ" என்றார். ஆண் நண்டு பெண் நண்டோடு கூடி மகிழ்தல் சிற்றின்பம். வண்டுகள் மொய்க்கும் மலர்க் கூந்தலையுடைய பெண்களை அன்னையாகக் கருதுதல் பேரின்பம். சிற்றின்பத்தில் நாட்டம் கொள்ளாது பேரின்பம் அடையும் காலம் உண்டு என்பதனை நூலாசிரியர் குறிப்பாக உணர்த்துகிறார்.

சந்திர காந்த மணிமாடத் தூடுதன் சாயை கண்டோர்
பைந்தொடி மாது தலைவனொ டூடப் பரிந்தவனே
சுந்தர ஆடி நிழற்காட்டி யின்புற சொற்புகலுஞ்
செந்திருப் போரிக் குகனைக் கண்டார்க்குண்டு சித்திகளே 45

**கருத்துரை**

திங்களைப் போன்று ஒளியை வீசும் கல்லால் செய்த மாளிகையின்கண் பசுமையான வளையலை அணிந்த ஒரு பெண் தன் அழகைக் கண்டு தலைவனோடு ஊடல் கொண்டாள். அத்தலைவன் தலைவியுடம் அன்பு கொண்டு அழகிய கண்ணாடியில் அவளது உடலழகைக் காண்பித்து இன்சொல் இயம்பினான். திருமகள் வாழும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுளைக் கண்டவர்க்கு அட்டமாசித்தி எனும் எண்வகைப் பேறுகளும் கைகூடும்.

**அரும்பதவுரை**

சந்திர காந்தக் கல் – திங்களைப் போன்று ஒளி வீசும் கல். சாயை – அழகு. பைந்தொடி – பழமையான வளையல். பண்புத்தொகை.

ஊட – ஊடல் கொள்ள. சுந்தரம் – அழகு. பரிந்து – அன்பு. ஆடி – கண்ணாடி. சித்திகள் – அட்டமாசித்தி

**விளக்கவுரை**

அட்டமாசித்திகள் – அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எண்வகைப் பேறுகள்.

1. அணிமா – கதிரெழு துகளினும் சிறியதாதல்
2. மகிமா – அண்ட கோளகையினும் பெரியதாதல்
3. இலகிமா – பஞ்சினும் மென்மையாதல்
4. கிரிமா – இரும்பு மலையினும் கனத்தல்
5. பிராப்தி – நினைத்த விடத்தே செல்லுதல்
6. பிராகாமியம் – தான் இருந்த விடத்திலேயே எவற்றையும் அறிதல்
7. ஈசத்துவம் – எவற்றிற்கும் தலைமையாதல்
8. வசித்துவம் – யாவரும் வணங்க நிற்றல்

ஏதங் கருதினர் செல்மினென் றேயும் இதங்கருதும்
போதஞ் சிறந்தவர் வம்மினென் றேயும் புகல்வனபோல்
வாதஞ் செறியக் கொடியாடும் போரி வரதன்தண்டை
நாதங்கள் யோகியர் யோகினிற் காண்குறு நாதங்களே. 46

**கருத்துரை**

உயிர்கட்குத் துன்பம் செய்யக் கருதுவோர் இவ்விடத்தினின்று செல்லுங்கள் என்றும், இன்பம் செய்யக் கருதுவோர் இவ்விடத்துக்கு வாருங்கள் என்றும், சொல்வதைப் போல காற்று வீசும் கொடிகளையுடைய திருப்போரூரில் வரத்தை வாரி வழங்கும் வள்ளல் வீற்றிருக்கும் கந்தனது திருவடியில் அணிந்த சிலம்பொலி நாதங்கள் சிவயோகியர்கள் தம் சிவயோகத்தில் கண்டு சிவதரிசனம் செய்யும் நாத ஒலிகளாகும்.

## அரும்பதவுரை

ஏதம் – துன்பம். இதம் – துன்பம். போதம் – அறிவு. வம்மின்– வாருங்கள், செல்மின் – செல்லுங்கள். வம்மின், செல்மின் – வியங்கோள் வினைமுற்று. வாதம் – காற்று. தண்டை – சிலம்பொலி. நாதம் –ஒலி.

## விளக்கவுரை

சிவயோகியர்கள் சிவயோகத்தில் காணும் சிவதரிசனக் காட்சி தசநாடிகளும், தச நாதங்களாக ஒலித்தல். இவற்றைக் கேட்டல் யோகியரது இயல்பு. தச நாடிகளாவன : இடைகலை – நாசி (இடது), பிங்கலை – நாசி (வலது), சுழுமுனை – வீணாதண்டம் (முதுகு), காந்தாரி – கண், அத்தி – எலும்பு, சிங்கு – நாக்கு, அலம்புடை – செவி, பூடா – புருடன் (கை), சங்கினி – உபத்தம், கு(கு)தம் – குதம் (குரு). தச வாயுக்கள் : பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருதரன், தேவதத்தன், தனஞ்செயன். "யோகியர் காண்குறு நாதங்கள்" என்றார். கொடி அசைதல் இயல்பு.ஆயினும் வம்மின் செல்மின் எனக் கூறியது தற்குறிப்பேற்றவணி.

தச நாதங்கள்
மணிகடல் யானை வார்குழல் மேகம்
அணிவண்டு தும்பி வளைபேரி கையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்க ஒண்ணாதே.

– திருமந்திரம் 606

தேரூர் இரவி வலவன்கை மீது செழுங்கொடிகள்
ஏராகத் தாக்குதல் எங்கோன் அயிலொளிக் கெய்துமுன்கோல்
நேரோசொல் நில்லென்று போரூர்கைக் கொண்டு நிறுத்தலொக்குஞ்
சீரூரும் இந்நக ரேகயி லாயந் தெளிந்தவர்க்கே 47

## கருத்துரை

சூரியனது தேரைச் செலுத்தும் பாகனாகிய அருணனது கைமேல் அழகு செறிந்த மாளிகையின் கட்டிய கொடிகள் தாக்கின.

எம்மிறைவனாகிய முருகனது வேலின் ஒளிக்கு உன் கையில் உள்ள முள் அமைந்த வேலுக்கு அவை ஈடாகுமா? இங்கு நிற்பாயாக ! என்று கூறித் அருணனது கையைப்பற்றி நிற்பதற்கு ஒப்பாகும். அத்தகைய சிறப்புமிக்க திருப்போரூரே தன்னைத் தெளிந்தார்க்கு திருக்கயிலாயமாகும்.

**அரும்பதவுரை**

இரவி – சூரியன். வலவன் – தேரோட்டி. அயில் – வேல். சீர் – சிறப்பு

**விளக்கவுரை**

முருகனது வேற்படையின் ஒளிக்கு முன் எவையும் ஒப்பாகா ஆதலின் " நேரோ சொல்" என்றார். திருப்போரூரே கயிலாயம் என்க. ஆதலின் "சீரூரு மிந்நகரே கயிலாயம்" என்றார். மேலும் தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம் ஆமாறு போல அறிவில் "தெளிந்தவாக்கே" என்றார். சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சியம் என்னும் நான்கு பதங்களையும் தருமாதலின் கயிலாயம் ஆயிற்று என்றனர்.

மனப்பரி சோர இறுமாந்து நாவி மதம்பொழியுந்
தனக்களிற் றன்ன முருகா குகாஎன்று தானுரைப்பப்
புனக்கிளி கற்கின்ற போரூர் இறையைப் புகழ்ந்தவரைச்
சினக்கனல் காமக் கனலும்விட் டோடுந் திசைப்புறனே. 48

**கருத்துரை**

மனமாகிய குதிரையானது ஆணவத்தால் தருக்கி, கஸ்தூரி எனும் மதத்தைப் பொழியும் ஆண்யானை போன்று முழக்கத்தினை முழங்கி "முருகா, குகா" என மொழியும் அன்னப்பறவை போன்ற பெண்கள் அதனைக் கூறவும், அத்தினைப்புனத்தில் வசிக்கும் கிளிகளும் கற்றுப் பேசும் திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக் கடவுளைப் போற்றியவர்கள். சினத்தீயும், காமத்தீயும் விட்டு விட்டு எண்திசைக்கு அப்பாலும் செல்லுவர்.

**அரும்பதவுரை**

மனப்பரி – மனமாகிய குதிரை – உருவகம். நாவி – கஸ்தூரி. கன்று – ஆண் யானை. புனக்கிளி – சோலைக்கிளி. சினக்கனல் – கோபமாகிய நெருப்பு. காமக்கனல் – சிற்றின்பம்.

**விளக்கவுரை**

மனத்தை குதிரையாகவும் ஆணவத்தை யானையாகவும் உவமை கூறினார். அன்னப்பறவை போன்ற பெண்கள் "முருகா" "குகா" எனக் கூறவும் சோலைக்கிளி அதனைக்கற்றுப் பேசின என்பதை "புனக்கிளி கற்கின்ற போரூர்" என்றார். சினமும், காமமும் பேரின்பத்திற்குத் தடையாதலின் சினக்கனல், காமக்கனல் என உருவகம் செய்து கூறினார் என்க.

சினம் மனத்தாலும், காமம் ஆணவத்தாலும் தோன்றும் மகாபாரதத்தில் துரியோதனன் கொண்ட சினத்தாலும், இராமாயணத்தில் இராவணனின் மனதில் கொண்ட காமத்தாலும் அழிந்தனர் என்பது வரலாறு.

மதிகொண்ட பூச்சக்ர வாளக் குடையின் வருநிழற்கீழ்த்
துதிகொண்ட யானைப் பிடர்மேல் வருமச் சுகந்தனிலும்
நதிகொண்ட பேரன்பி னாற்போரி வேலனை நண்ணியின்பக்
கதிகொண்ட மேலவர் கால்தலை தாங்கல் கனசுகமே. 49

**கருத்துரை**

திங்களைப்போன்று பூக்களால் அமைந்த சக்கரக்குடையின் நிழலில் போற்றுதலமைந்த துதிக்கையுடைய யானையின் கழுத்தில் மேல் வரும் அரசனது இன்பத்தைக் காட்டிலும், ஆறு போலப் பெருகி வரும் பேரன்பினால் திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக் கடவுளை வணங்கும் பணிவு பொருந்திய சிவஞானிகளது திருவடிகளைத் தலைமேல் தாங்குதல் பேரின்பமாகும்.

**அரும்பதவுரை**

மதி – திங்கள். சக்ரவாளக்குடை – சக்கரம் போன்ற (அரசனது) குடை. பிடரி – கழுத்து. நண்ணி – அடைந்து. மேலவர் – மேலானவர். கால் தலை தாங்கல் – திருவடியை சுமத்தல்.

**விளக்கவுரை**

யானையின் மீது சக்கரக்குடையின் கீழ் வரும் அரசன் வலம் வருதல் இன்பம் பயப்பதாயினும், முருகனை வணங்கிய சிவஞானியர் திருவடியை திருமுடி மேல் வைத்தல் " கன சுகம்" என பேரின்பத்தைக் கூறினார்.

அரசனது வெண் கொற்றக்குடையை பூப்போன்ற மென்மையும் சக்கரம் போன்ற வடிவையும் உடையததால் பற்றி "பூச்சக்ரவாளக் குடை" என்றார். முருகனை வணங்கும் அடியார்கள் எல்லார்க்கும் "மேலவர்" ஆதலின் அவர்களது திருவடியை வணங்குதல் சிறப்பாதலின் "கால்தலை தாங்கல்" என்றார்.

அளகா புரியன்ன பட்டணத் தேசுதை யால்வளைந்த
களவார் முகில்படி மாடத்தி னூடு களித்தலினும்
புளகா டவியெழ மெய்ப்போரி வேலனைப் போற்றிஉய்வார்
வளவார் புறந்திண்ணை வைகுத லேதமில் மாசுகமே 50

**கருத்துரை**

குபேரனது "அளாகாபுரி" பட்டணத்தில் சுண்ணவெண் சாந்தால் தீட்டிய கரு நிறம் வாய்ந்த களாக்கனி போன்ற மேகம் தவழும் மாளிகையின் மீது மகிழ்ச்சியடைதலைக் காட்டிலும் மயிர்க்கூச்செறிய உடம்பு புளகாங்கிதம் உண்டாகுமாறு திருப்போரூரில் எழுந்தருளியுள்ள கந்தக் கடவுளைப் போற்றி உய்யும் வளம் நிறைந்த அன்பர்களது வீட்டின் புறத்திண்ணையில் வசித்து வாழும் வாழ்வு குற்றமில்லாத மிகுந்த பேரின்பமாகும்.

**அரும்பதவுரை**

அளாகாபுரி – குபேரன் வாழுமிடம். சுதை – சுண்ணாம்பு. வெண் சாந்து – வெண்மையான குழம்பு. களவார் முகில் – களாக்கனியைப் போன்ற கருநிறம் வாய்ந்த மேகம். மெய் – உடம்பு. ஏதம் – குற்றம். மாசுகம் – பேரின்பம்

**விளக்கவுரை**

குபேரன் போன்ற செல்வ வாழ்வு துன்பம் தரத்தக்கது. அடியார்களது புறத்திண்ணையே பேரின்பம் தரத்தக்கது என "ஏதமில் மாசுகம்" என்றார். குபேரன் வாழும் அளாகாபுரி பட்டணம் சுண்ண வெண்சாந்தால் கட்டப்பட்டது எனவும் மேகம் தவழும் மாடங்கள் எனவும் கூறினார்.

உள்ளக் கவலை எலாம்ஒழிந் தேன்ஒழி யாதுசெய்யுங்
கள்ளக் கருமங்கள் யாவும்விண் டேன்கலை வாணியுடன்
வள்ளக் கமல மலர்மாது தந்தருள் வாழ்வடைந்தேன்
தெள்ளத் தெளிந்தனன் போரூர் முருகனைச் சேவை செய்தே 51

## கருத்துரை

அருள் செய்யும் தன்மையுடைய கடவுளர் யாவரினும் மேலான பரம்பொருளாக உள்ளவன் முருகப்பெருமான் ஒருவனே என்பதை அறிவினால் தெள்ளத் தெளிவாக அறிந்து பணி செய்தமையால் மனக்கவலைகள் யாவும் நீங்கியது. மனத்தினுள் ஒளிந்து கொண்டிருக்கும் புலன்கள் மூலம் செய்யும் வஞ்சனைச் செயல்கள் யாவும் நீங்கி மகிழ்ந்தேன். கலைமகள் மற்றும் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும். திருமகள் திருவருளுடன் வாழ்வாங்கு வாழப்பெற்றேன்.

## அரும்பதவுரை

உள்ளக்கவலை – மனக்கவலை. கள்ளக் கருமங்கள் – கள்ளப்புலன்கள். விண்டேன் – மலர்ந்தேன். கலைவாணி – சரஸ்வதி, கலைமகள். கமலமலர் மாது – திருமகள், இலக்குமி

## விளக்கவுரை

எல்லார்க்கும் மேலவன் முருகப்பெருமான் என்பதை உணர்ந்ததால் "தெள்ளத்தெளிந்தனன்" என்றார். தனக்குவமை இல்லாதான்தாள் சேர்ந்தார்க்கல்லால் மனக்கவலை நீங்கியது. கள்ளப்புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்தது. கந்தப்பெருமானுக்குச் சேவை செய்ததால் அவை காளாமணி விளக்காய்த் திகழ்ந்தன. மனமாகிய மலர் விரிந்து மகிழ்ந்ததை "விண்டேன்" என்றார். இம்மையின்பத்தையும், மறுமையின்பதையும் தருதல் கல்வியும் செல்வமும். ஆதலின் "அருள் வாழ்வடைந்தேன்" என்றார்.

பூதர விற்கொண் டவுணரை மாய்த்த புராரிமைந்தன்
ஆதர வால்அணிப் போரூர் இருந்திங் கவனருளாற்
சீதரன் நன்மரு காமுரு கா என்று செப்பின் அன்பின்
தாதரம் போலுறுந் தீவினை யாவுந் தணந்தனவே. 52

**கருத்துரை**

மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களில் உள்ள அசுரர்களைப் புன்னகையினால் எரித்தருளிய சிவபெருமானின் மகனாகிய கந்தப் பெருமானது திருவடியில் வைத்த பேரன்பால், திருப்போரூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருக்கும் அவனருளாலே அவன்தாள் வணங்கும் திருமாலின் நல்ல மருமகனே – முருகா என உனைப் போற்றிப் புகழ்ந்தேன். இரும்பினை அறுக்கும் அரத்தைப் போல எனது தீவினைகள் எல்லாம் மாய்ந்தொழிந்தன.

**அரும்பதவுரை**

பூதரம் – மேருமலை. அவுணர் – அசுரர். மாய்த்த – அழித்த. புராரி – திருமால். சீதான் – திருமால். தாதரம் – இரும்பினை அறுக்கும் அரம். (உவமை). தணந்தன – மாய்ந்து ஒழிந்தன.

**விளக்கவுரை**

முப்புரம் எரி செய்த அதிதீரா – திருப்புகழ். மறக்கருணை – வேதகிரீசுவரர் பதிகம் முதற்பாடலில் இதன் விரிவு காண்க. அவனருளாலே அவன்தாள் வணங்கி எனும் திருவாசகத் தொடரை நினைவு கூர்தல் காண்க. "இரும்புதரு மனத்தேனை ஈர்த்து கரும்புதிரை சுவையைக் காட்டியமையால் தீவினை தணிந்தது" என்றார்.

வட்டாடல் போலப் பிறப்பதுஞ் சாவது மாக்கியென்று
ஒட்டாரஞ் செய்கின்ற மாயை யுணர்ந்தும் உணரவொட்டா
தட்டாவ தானஞ்செயுஞ்சீ வரைப்பொய்மை யாயிருத்துங்
கட்டாணி யானமுத் தேசம ராபுரிக் காங்கெயனே. 53

**கருத்துரை**

சூதாடும் கருவி புரள்வதைப் போல பிறப்பும், இறப்பும் ஆகிய இச்செயல்களையே மீண்டும் மீண்டும் செய்வது "மாயை". இத்தன்மையது என்பதை உணர்ந்தும் உணரவொட்டாமல் செய்வது இம்மாயையே. ஒரே சமயத்தில் எட்டு செயல்களைச் செய்யும் "அட்டவதானி" எனும் சீலர்களையும் "பொய்ம்மை" நிலையிலேயே நிறுத்தி "மெய்ம்மையை"

உணராமல் செய்வதும் அம்மாயையாம். அத்தகைய வலிமையான நிலையான "மாயை" எனும் கருவியை ஆட்டுவிக்கும் முழுமுதற்பொருளே. முத்து போன்றவனே சமராபுரி எனும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் கந்தக்கடவுளே, கங்கையில் தோன்றியவனே. அருள் செய்வாயாக.

**அரும்பதவுரை**

வட்டாடல் – சூதாடும் கருவி. மாயை – சுத்தமாயை. அசுத்த மாயை என இருவகைப்படும். ஒட்டாரம் – பிடிவாதம். அட்டாவதானம் – ஒரே சமயத்தில் 8 பொருள்களில் கவனஞ் செலுத்துதல். சீவர் – உயிர் உள்ளோர். கட்டாணி – பலசாலி.

**விளக்கவுரை**

மாயையின் செயல்கள் : வித்து போன்றது. இறைவன் நிலம் போன்றவன். உலகத்தைத் தோற்றுவிப்பது மாயை முதற்காரணம். இறைவன் துணைக்காரணம். நிலத்தின்கண் வித்துள்ள போது முளை தோன்றலும் நிலத்தின்கண் வித்தில்லாத பொழுது முளை தோன்றாமையும் ஆம் அதுபோல இறைவனிடத்து மாயை இருப்பது.

ஆதலால் "ஒட்டாரம் செய்கின்ற மாயை" எனவும் "உணரவொட்டா மாயை" எனவும் கூறினார். கந்தன் மாயையை ஆட்டுவிக்கும் வல்லமை உடையவன். ஆதலின் "கட்டாணியானே முத்தே" என்றார். "பிரபுலிங்கலீலையில்" மாயையின் இயல்புகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அருள்செய்க என்பது குறிப்பு.

ஆள்வேட்டம் ஆடும் அயில்விழி மாதர் அமைகடந்த
தாள்வேட்ட புன்னெஞ்ச மேயது சீவரைச் சூழ்ந்துகொண்டே
வேள்வேட்டம் ஆடுவ தாங்கேகல் போரி விசாகன்இரு
தாள்வேட்டு நாடுதி மேலவீட்டின் இன்பம் தழைத்துறுமே 54

**கருத்துரை**

ஆடவர்களாகிய விலங்குகளை வேட்டையாடும், வேல் போலுங் கண்களையுடைய பெண்களது மூங்கிலையொத்த தோள்களை விரும்பிய

இழிந்த மனமே – அவ்விருப்பச் செயல் உயிர்களைச் சூழ்ந்து விளங்குவதால் மன்மதன் வேட்டையாடுவதற்கோர் இடமாக உள்ளது. அம்மயக்க வலையில் அகப்படாதே. திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் விசாகப் பெருமானாகிய இருதிருவடிகளையும் விரும்பி நாடுவாயாக. அதனால் வீடுபேறு என்னும் பேரின்பம் உண்டாகும்.

**அரும்பதவுரை**

வேட்டம் – வேட்டை. அயில்விழி – வேல்விழி உவமைத்தொகை. அமைகடந்ததோள் – மூங்கிலையொத்த தோள். வேள் – மன்மதன். ஏகேல் – செல்லாதே.

**விளக்கவுரை**

பெண் இன்பத்தை மெய் எனக் கருதியதால் மனத்தைப் "புன்னெஞ்சமே" என்றார். பெண்களது கண்கள் ஆண்களை வேட்டையாடும் வேல்விழியாதலின் " அயில்விழி என்றார். உயிர்களைக் கொல்லும் மன்மதன் வேட்டைக்களம் ஆயிற்று. ஆதலின் "வேள்வேட்டம்" என்றார். மூவாசையில் பெண் இன்பம் ஒழிந்தால், ஏனைய இரு ஆசைகளும் (மண், பொன்) நீங்கும் என்பது குறிப்பு.

ஆறு சமயருந் தம்மிலொவ் வாதிங் கலைவதென்னே
தேறும் அறிவின ரெல்லாம் அறிந்துந் தெளிந்திலரே
பேறு தருந்தெய்வம் யாவைக்கும் யான்பெருந் தேவனென்றே
வீறு முகங்கொண்டு போரூர் முருகன் விளங்கியதே 55

**கருத்துரை**

கற்றறிந்த அறிஞர்கள் யாவரும் தாம் உணர்ந்து இருந்தும், அறுவகைப்பட்ட புறச்சமயத்தவரும் தமக்குள் கருத்து மாறுபட்டுத் தெளிவில்லாதவராய் இருப்பது என்னே! தம்மை எண்ணியவர்க்குப் பயன்தரும் கடவுளர் யாவர்க்கும் யானே முதற்கடவுளாய் உள்ளவன் என்று ஆறுமுகங்களைக்கொண்டு திருப்போரூரில் கந்தப்பெருமான் எழுந்தருளியுள்ளான். அத்தகைய கடவுளை வணங்காமல் வருந்தித்திரிவது யாது?

## அரும்பதவுரை

ஒவ்வாது – கருத்தொருமித்தல் இல்லாது. மாறுபட்டு – வேறுபட்டு. தேறும் – தெளிந்த. பெறு – பேறு முதனிலைத் திரிந்த தொழிற்பெயர். தேவன் – தேவர்கட்குத் தலைவன். வீறுமுகம் – ஆறுமுகம். வீறு – பெருமை.

## விளக்கவுரை

1) அகச்சமயம் : சைவ சித்தாந்த செந்நெறிகளைப் பெரிதும் ஏற்பினும் வீட்டு நெறியில் வேறுபடுவர்.
2) புறச்சமயம் : வேதங்களை ஏற்றுக்கொண்டு சிவாகமங்களை ஒப்புக்கொள்ளாதவர்
3) அகப்புறச்சமயம் : வேதாகமங்களைப் பொதுவாக ஏற்றுக்கொண்டு பாசுபதம் முதலான நூல்களைச் சிறப்பாக ஏற்றுக்கொள்பவர்.
4) புறப்பறச்சமயம் : வேத ஆகமங்களைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளாதவர்

அறுவகைப்பட்ட சமயம் – அகச்சமயம் : சைவம், வைணவம், சாக்தம், சூரியன், கணபதி, கௌமாரம், புறச்சமயம் : தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மகவாதம், சாங்கியம், யோம், பாஞ்சராத்திரம். அகப்புறச்சமயம் : பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்யவாதசைவம். புறப்புறச் சமயம் : உலகாயுதம், மாத்துமிகம், யோகாசாரம், சவுத்திராந்திகம், ஆருகதம், வைபாடிகம்.

ஆறுசமயப்பொருளோனே – திருப்புகழ். எல்லார்க்கு மேலவன் என்றேத்தியதால் ''பெருந்தேவன்'' என்றார். தேறும் அறிவினர் – தெளிந்த அறிவினர். தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே – திருமூலர்.

மற்றவர் நிற்கமெய்ஞ்ஞானிகள் வம்மின் வகுத்துரைக்கேன்
உற்றது கேண்மின்எம் போரூர் முருகன் உயர்கதியை
நற்றமிழ்க் காழிவந் தெண்ணிலி யோர்க்கு நயந்தளித்தான்
கொற்றம் அவனதல் லால்எவர்க் குண்டினிக் கூறுமினே. 56

## கருத்துரை

புறச்சமயத்தவர்களே நில்லுங்கள். உண்மையான ஞானம் பெற்றவர்களே வாருங்கள். உங்களுக்கு நன்கு விளங்குமாறு கூறுகின்றேன்.

நடந்த செய்தியைக் கேளுங்கள். திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுள் சீகாழி என்னும் தலத்தில் தோன்றி நல்ல தமிழை நாளும் ஓதியருளினார். பெருமணநல்லூர் என்னுமிடத்தில் அளவற்ற அடியார்கட்கு வீடு பேற்றினை விரும்பியளித்தான். வெற்றி என்பது அம்முருகப் பெருமானுடையது அல்லால் வேறு எவருக்கும் இல்லை என்று இனியாவது கூறுங்கள்.

## அரும்பதவுரை

மற்றவர் – புறச்சமயத்தவர். வகுத்துரைத்து – விளங்குமாறு கூறுதல். கேண்மின் – வியங்கோள். உயர்கதி –வீடுபேறு. காழி –சீர்காழி. கொற்றம் – வெற்றி.

## விளக்கவுரை

“பொய்ஞ்ஞானிகள் வீடு பேற்றினை விரும்பாதவர்கள்”. ஆதலால் “மெய்ஞ்ஞானிகளே வம்மின்” என்றார். ஆகம அளவையில் கூறுதல் மட்டுமின்றி கண்ணால் காண்பது இல்லை. ஆனால் பெருமணநல்லூரில் வாழும் அடியார் பெருமக்கள் அனைவருக்கும் வீடு பேற்றினை விரும்பி அளித்தான். ஆதலால் “உயர்கதியை – நயந்தளித்தான்” என்றார். போரில் வெற்றி பெறுதலை “கொற்றம்” என்பர். வீடு பேறு அனைவருக்கும் அளித்தமையால் “கொற்றம்” என்றார்.

கரும்பாற்செய் வேலி சுரும்பார்க்கும் போரியங் காங்கெயன் போல்
திரும்பாச் சுகந்தரு வீடீவ தற்குஞ் சிறப்புடனே
பெரும்பாற் றிருத்தரு பெற்றிக்குந் தேவர் பிறரிலையென்
றிரும்பாற் கடற்றுயின் றோன்நெய்யி னூடுகை யிட்டனனே. 57

## கருத்துரை

கரும்பையே வேலியாக உடைய நிலத்தில் வண்டுகள் ஒலிக்கும் திருப்போரூரில் தோன்றிய கந்த சுவாமிப் பெருமான் அடியவர்கள் மீண்டும் பிறவா நெறியை அளிக்கும் பேரின்பமாகிய வீடு பேற்றினைத் தந்தருளினான். சிறப்போடு வாழும் பெரும்பான்மையான மக்கள் விரும்பும் செல்வத்தை இம்மையில் தரும் தன்மை வேறு கடவுளர் யாவர்க்கும் இல்லை என்று பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் திருமால் நெய்யில் கை தோய்த்தான் என்க.

**அரும்பதவுரை**

சுரும்பு – வண்டு. செய்வேலி – வினைத்தொகை – காங்கேயன் – கங்கையில் தோன்றியவன். திரும்பாச்சுகம் – பிறவா நெறி. திரு – செல்வம். துயின்றோன் – பள்ளி கொண்டோன்.

**விளக்கவுரை**

பிறவா நெறியளிக்கும் பிரான் என்பதை "திரும்பாச்சுகம்" என்றார். இம்மையில் செல்வம் தரக்கருதிய திருமால் நெய்யில் கை தோய்த்தான் என்பதை "நெய்யினில் ஊடு கையிட்டனனே" என்றார். திருமால் கண்ணனாகத் தோன்றிய காலத்தில் வெண்ணெயில் கையை இட்டு அள்ளிப் பருகினான் என்க. வெண்ணெயும் நெய்யும் ஒன்றாதல் காண்க.

வேதனெங் கேஅவன் தாதையெங் கேவிண்ணின் நண்ணுபுரு
கூதனெங் கேமிகு தேவரெங் கேகுறை யாததவப்
போதரெங் கேஅற மாதியெங் கேதிருப் போரியில்வாழ்
நாதனெங் கோனவரைப்போலச் சூரையும் நாடிடிலே. 58

**கருத்துரை**

திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் எம் தலைவனாகிய கந்தப் பெருமான், நான்முகன் போன்று தேவர்கள் அஞ்சியதைப் போல அஞ்சியிருந்தால் என்னவாகியிருக்கும். நான்முகன் எங்கே? அவனுடைய தந்தையாகிய திருமால் எங்கே? விண்ணில் வசிக்கும் இந்திரன் எங்கே ? தேவர்கள் எங்கே ? தவத்தையுடைய முனிவர்கள் எங்கே ? அறம் முதலிய நான்கு பொருள்களும் எங்கே ?

**அரும்பதவுரை**

வேதன் – நான்முகன். தாதை – தந்தை (திருமால்) புருகூதன் – இந்திரன். தவப்போதர் – முனிவர். அறமாதி – அறம், பொருள், இன்பம், வீடு.

**விளக்கவுரை**

கந்தப் பெருமானும் அதற்கு அஞ்சியிருப்பின் தேவர்கள் முதலிய யாவரும் அழிந்தொழிந்திருப்பர். ஆதலின் "சூரையும் நாடிடிலே" என்றார்.

எல்லார்க்கும் மேலானவன் கந்தன் ஆதலின் "நாதன் எங்கோன்" என்றார்.

திருநீல கண்டம்வெந் தீவினை தீண்டப் பெறாஎனவே
கருநீல கண்டனைப் பாடி அடியரைக் காத்தவன்எம்
உருமே லிருந்த பிணியையும் மாற்றுவன் உண்மைநெஞ்சே
இருநீல வாவிநம் போரூ ரனைப்பணிந் தேத்துவையே 59

**கருத்துரை**

"திருநீலகண்டம்" கொடிய தீவினைகள் தீண்டப் பெறாது எனும் திருப்பதிகம். கரிய கழுத்தினையுடைய சிவபெருமானைத் திருஞான சம்பந்தராகத் தோன்றிய காலத்தில் பாடித் தன் அடியவர்களை "திருச்செங்கோடு" எனும் திருத்தலத்தில் காத்தவன்.ஆதலால் எமது உடலின் மேலிருந்த பிறவிப்பிணியையும் போக்குவன் – " உண்மை நெஞ்சே" அஞ்சேல் என்க. குவளை மலர்கள் மலரும் தடாகத்தினைச் சூழ்ந்த திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் கந்தக் கடவுளைப் பணிந்து புகழ்ந்து போற்றுவாயாக !

**அரும்பதவுரை**

திருநீலகண்டம் – கரிய கழுத்தினை உடைய சிவபெருமான். வெந்தீவினை – வெம்மையான தீ போன்ற வினை – இருபெயரொட்டு பண்புத்தொகை. தீண்டப் பெறா – தன்மனைவியைத் தீண்டாமலேயே வாழ்ந்த திருநீலகண்டர். உரு – உடல். பிணி – பிறவிப்பிணி. இருநீலவாவி – குவளை மலர்கள் மலரும் குளம். ஏத்துவையே – போற்றுவாயாக.

**விளக்கவுரை**

திருநீலகண்ட நாயனார் வரலாறு பெரிய புராணத்துள் காண்க. "அவ்வினைக்கு இவ்வினையாம்" என்ற பாடலால் திருஞான சம்பந்தர் பாடி அடியவர்களின் துயரைத் துடைத்தார். வினைக்குக் காரணமாதலின் பிறவியாகிய பிணியைப் போக்க போரூர் முருகனைப் பணிந்து புகழ்ந்தால் மாற்றலாம் என்றார்.

அஞ்ஞானத் தால்அடியேன் பிழை செய்யினு மாரருள் சேர்
மெய்ஞ்ஞானத் தாய்பொறுத் தாட்கொள்ள வேண்டும் வியன்மறைதேர்
செஞ்ஞானத் தார்புகழ் போரூர் முருக செகமுயிராம்
பொய்ஞ்ஞானக் கூட்டத்துக் குட்புற னாகிய பூரணனே. 60

**கருத்துரை**

எல்லையற்ற வேதங்களையுணர்ந்த சிவஞானச் சீலர்கள் புகழும் திருப்போரூர் முருகனே. பொய்ம்மையே ஞானமாகக் கொண்டு உலக உயிர்களாக விளங்கும் அடியார் கூட்டத்தின் உள்ளும் புறமுமாய் நிறைந்தவனே – அறியாமையினால் அடியேன் தவறு செய்திடினும் உயிர்களிடத்துப் பேரருள் உடையவராய் ஆதலின், உண்மையான ஞானத்தை வழங்குபவரே. யான் செய்த பிழையைப் பொறுத்து அடியேனை ஆட்கொள்ளுதல் வேண்டும்.

**அரும்பதவுரை**

அஞ்ஞானம் – அறியாமை, பொய்ம்மை. மெய்ஞ்ஞானம் – உண்மையான பேரறிவு (சிவஞானம்). மறை – வேதம். செகம் – உலகம். பொய்ஞ்ஞானம் – பொய்ம்மையே ஞானமாகக் கொண்ட உயிர்கள்.

**விளக்கவுரை**

மெய்ஞ்ஞானம் உள்ள அடியார்களிடத்தும் உள்ளும் புறமுமாய்த் தோன்றி, அழியும் உலகத்திற்கு அப்பாற்பட்டவன். ஆதலின் "உட்புறனாகிய பூரணன்" என்றார். மறைகளையுணர்ந்த ஞானியர்களை "செஞ்ஞானத்தார்" என்றார். முருகப் பெருமானை "மெய்ஞ்ஞானத்தாய்" என்றார். உலகமும் உயிரும் பொய்ம்மையாதலால் "செகமுயிராம் பொய்ஞ்ஞானக் கூட்டம்" என்றார்.

புரங்கொன்ற தேவெள்ளி மாமலை நீலப் புயமலைமேல்
உரங்கொண் டெடுத்தவன் ஈரைந்து சென்னியும் ஊடுறவே
கரங்கொண்ட வாளியி னாலெய்த மாயன் கனமருகா
திரங்கொண்ட போரி முருகாஎன் தீவினை தீர்த்தருளே 61

**கருத்துரை**

முப்புரங்களையும் தனது நகைப்பின் மூலம் எரிசெய்த சிவபெருமானது, பெரிய வெள்ளிமலையை தனது நீலமலை ஆகிய புயத்தினால் வலிமை கொண்டு எடுத்த இராவணனுடைய பத்துத் தலைகளையும் இடையே வைத்து உணருமாறு, தனது கையில் உள்ள அம்பினால் எய்திட மேன்மை பொருந்திய திருமாலின் மருமகனாகிய முருகப் பெருமானே நிலைபெற்ற திருப்போரூரில் எழுந்தருளிய முருகனே எமது கொடிய தீவினையை நீக்கியருள்வாயாக.

**அரும்பதவுரை**

புரம் – முப்புரம். வெள்ளிமலை – கயிலைமலை. புயம் – புஜம். நீலப்புயமலை என உருவகம் செய்தார். உளம் – வலிமை. ஈரைந்து சென்னி – பத்துத்தலை களையுடைய இராவணன். வாளி – அம்பு – மாயன் – கண்ணன், திருமால். திரம் கொண்ட – நிலை பெற்ற.

**விளக்கவுரை**

வெள்ளிமலையை தனது நீலநிற மலையாகிய, புயத்தினால் தூக்கிய இராவணனையும் அழித்தவன். ஆதலின் "கரம் கொண்ட வாளியினால் எய்த மாயன்" என்றார். நிலை பெற்ற தலமாதலின் "திரம் கொண்ட போரி" என்றார்.

புரங்கொன்றவன் – சிவபெருமான்
உரங்கொண்டவன் – இராவணன்

நெஞ்சைக் கலக்குறுஞ் சேலோ ரிரண்டுடை நேரிழையார்
வஞ்சக் கலவிமெய் யென்றே மயங்கினை வன்னெஞ்சமே
துஞ்சற்கும் வந்து பிறத்தற்கும் ஏத்து சொற்கதிசேர்த்
துஞ்சற்கு நீதிருப் போரூர்க் குகனை யுறப்பணியே. 62

**கருத்துரை**

வலிமை பொருந்திய நெஞ்சமே. மனத்தை நிலை கலங்கச் செய்யும் மீன் போன்ற இருகண்களையுடைய பெண்களது வஞ்சகம் பொருந்திய சிற்றின்பப் புணர்ச்சியை உண்மை என்றே மயங்கி நின்றனை – இவ்வுலகில்

சிறப்புக்கும் பிறப்புக்கும் காரணம் இதுவே. சொல்லுதற்கரிய வீடுபேறு அடைய திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக் கடவுளை குகப் பெருமானைப் பணிந்து நீ வாழ்வாயாக.

**அரும்பதவுரை**

சேல் – கயல். நேரிழையார் – பெண்கள். கலவி – சிற்றின்பம். துஞ்சல் – இறத்தல். ஏது – காரணம். கதி – வீடு பேறு.

**விளக்கவுரை**

பொய்யை மெய் என்று எண்ணுவது மனத்தினது இயல்பு – அதலின் இழிவு படுத்தி "வன்னெஞ்சமே" என்றார். இவ்வுலகில் உயிர்களின் பிறப்புக்கும் இறப்புக்கும் காரணம் (ஏது) சிற்றின்பமே எனவும், கந்தனைப் பணிந்தால் வீடுபேறு (கதி) அடையலாம் என்றும், அதுவே வழி என்றும் நூலாசிரியர் கூறினார் என்க.

கொலையாதி செய்தவ ராயினும் அன்பு குணம்பொறுமை
இலையாம் உளத்தின ராயினும் போரி யிசைந்தகுண
மலைபோ லிருந்த வடிவே லனைவந்து வாழ்த்தினரேல்
தொலையாமெஞ் ஞான மடைவார்முன் மேவுந்துயரிலரே. 63

**கருத்துரை**

கொலை முதலிய கொடிய தொழிலைச் செய்தவராயினும், அன்பு, குணம், பொறுமை இல்லாத மனத்தவராயினும், திருப்போரூர் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள சத்துவகுணமுடைய மலை போன்ற வடிவேலை ஏந்திய கந்தக் கடவுளை சரணடைந்து வாழ்த்துவராயின் அழியாத மெய்ஞ்ஞானத்தை அடைவார்கள். முன்னர் தேடிய வினைத் துன்பத்தையும் ஒழித்தவராவார் என்க.

**அரும்பதவுரை**

கொலையாதி – கொலை, களவு, கள், காமம், சினம், துரோகம். இல்லை – இலை (இடைக்குறை) முக்குணங்கள் – சத்துவ, இராஜச, தமோ குணங்கள்.

துயர்– துன்பம். தொலையா – அழியாத. அடியார்கட்கு உள்ள பண்புகள் – அன்பு, குணம், பொறுமை ஆயினும். உம்மை – இழிவு சிறப்பும்மை.

**விளக்கவுரை**

காமத்தால் தசரதனும், குரோதத்தால் கம்சனும், உலோபத்தால் துரியோதனனும், மோகத்தால் இராவணனும், ஆணவத்தால் சூரபதுமனும், மார்ச்சரியத்தால் சிசுபாலனும் அழிந்தார்கள். பேரூர் ஸ்ரீ சாந்தலிங்கர் அருளிய "கொலை மறுத்தல்" எனும் நூலுக்கு சிதம்பரசுவாமிகள் உரைவளம் செய்தமை காண்க.

இமையாக் கருங்கண் முலையானை மாதரை யெண்ணி யெண்ணிச்
சுமையாகப் பாவஞ் சுமக்குநெஞ் சேயிது துன்புகண்டாய்
சமையாதி யாறும் உடையோர்க்கு வீடு தரும்பெருமாள்
நமையாட்கொள் போரிக் குமரேசன் சேவடி நாடின்பமே 64

**கருத்துரை**

இமைக்காத கரிய கண்கள் போன்ற தனங்களை உடைய பெண்களை நாள்தோறும் எண்ணியெண்ணிப் பெருஞ்சுமையாகத் தீவினையைச் சுமந்து திரிகின்ற மனமே ! இச்செய்கை பெருந்துன்பம் தருவதாகும். அறுவகைச் சமயங்களை மேற்கொண்டு ஒழுகும் அடியவர்கட்கு வீடு பேற்றைத் தருபவன் கந்தப்பெருமான். அத்தகைய பெருமான் நம்மை ஆட்கொள்ளும் பொருட்டு திருப்போரூரில் எழுந்தருளிய குமரனது சிவந்த திருவடியை நாடு – அத்திருவடியை நாடினால் பேரின்பத்தை அளிப்பான்.

**அரும்பதவுரை**

கருங்கண், சேவடி – பண்புத்தொகை. குமரேசன் – குமரன், ஈசன் இருபெயரொட்டு. அறுசமயம் – சைவம், வைணவம், சாக்தம், சௌமாரம், காணாபத்யம், கௌமாரம்.

**விளக்கவுரை**

பால்சுரக்கும் தனத்தின் முகத்திற்குக் கண் என்றார். கண் இமை கொட்டுவது போன்று இஃது இமை கொட்டாமையின் முலையை யானையாக உருவகம் செய்தார். ஆதலின் "இமையாக் கருங்கண்

முலையானை'' என்றார். தனக்கு மகனாகிய தத்துவன் கந்தப்பெருமான் ஆதலின் ''குமரேசன்'' என்றார். அவனது திருவடியை ''சேவடி'' என்றார். ஏன்எனில் அடியார்கள் திருப்பாதங்களைத் தொட்டு வணங்குவதால் சிவந்த திருவடியாயிற்று.

சடையாம் பவளக் கொடிபடர் பேரின்ப சாகரத்தே
கடையா தெழுந்த சுகவா ரமுதினைக் கஞ்சம்ஒன்று
புடைதோன்றும் உந்திப் புணரி மருகனைப் புண்ணியனை
மிடைதீரப் போரியிற் கண்டேன் கதியின்ப மேவினனே 65

**கருத்துரை**

சடையாகிய பவளக்கொடி படர்ந்த பேரின்பம் என்னும் கடலைக் கடைந்து தோன்றாமல் தோன்றிய பேரின்பமாகிய அமிழ்தம் போன்றவனே. தாமரையொன்று தன்னிடத்தில் தோன்றும் உந்தியை உடைய கடலாகிய திருமால் மருமகனை, அறவடிவாக உள்ளவனை, என் வறுமை தீரத் திருப்போரூரில் கண்டேன். கண்டதற்குப் பயனாகிய வீடுபேறு என்னும் பேரின்பத்தை அன்றே அடைந்தேன்.

**அரும்பதவுரை**

சாகரம் – கடல். சுகவாரமுதினை – பேரின்பமாகிய அமுதினை. கஞ்சம் – தாமரை. புணரி – கடல். உந்தி – கொப்பூழ். மிடை – வறுமை.

**விளக்கவுரை**

ஊழிக்காலத்தில் மூன்றுலகமும் அழிய நிலைகடந்து எழுந்த கடற்பெருக்கில் பாம்புப் படுக்கையின் மேல் திருமால் அறிதுயில் கொள்ளுங்கால், அவரது திருவுந்தியாகிய தடாகத்தில் 100 யோசனையளவு பரந்து 100 யோசனை அளவு நீண்டு, ஆயிரம் இதழை விரித்து ஒரு தாமரை மலர் மலர்ந்தது என்பது புராணவரலாறு. ஆதலின் ''கஞ்சமொன்று புடைதேர்ந்து புணரி'' என்றார்.

மேருப் பொருப்பினைச் சென்றே வியன் அண்ட கூடமுட்டுஞ்
சூரப்பொருப்பைத் தொளைத்தவை வேலன் துங்கன் எங்கோன்
போரிப் பிரான்எம் பிழைபொறுத் தாலன்ன பூதலத்தே
யாரிப் படிபொறுப் பார்சொல்க நீயிங் கறிந்துள்ளமே. 66

### கருத்துரை

மேருமலையைச் சென்று அடைந்து பரந்து விரிந்த இவ்வுலகத்தை முட்டும் அளவில் சூரபதுமனாகிய மலையைத் துளைத்து இரு கூறாக்கிய வேலேந்தியவனும், உயர்ந்தோனும் எம்முடைய தலைவனும் ஆகிய கந்தக்கடவுள் திருப்போரூரில் எழுந்தருளியுள்ளான். எம்முடைய தவறுகளைப் பொறுத்து ஆட்கொள்வது போன்ற அருள்தன்மை இவ்வுலகில் வேறு எந்த கடவுளுக்கும் இல்லை எனலாம். மனமே ! இதனை இவ்விடத்தில் தெரிந்து சொல்வாயாக !

### அரும்பதவுரை

பொருப்பு – மலை. வியன் – அகன்ற. அண்டம் – உலகம். சூரப்பொருப்பு – சூரபதுமனாகிய மலை. பிரான் – தலைவன். துங்கன் – உயர்ந்தோன்.

### விளக்கவுரை

சூரபதுமன் போரில் புறங்கொடுத்து மேரு மலையைத் தொடும் அளவிற்கு மலையாக நின்றான். அம்மலையைக் கந்தனது வேல் துளைத்து இரு கூறாக்கியது என்பதனை "மேருப் பொருப்பினைச் சென்றே வாயின் அண்டகூட முட்டுஞ் சூரப்பொருப்பைத் துளைத்தவேல்" என்றார். பிழை பொறுத்தல் கந்தப் பெருமானுக்கே உரியதாதலின் "யார் இப்படிப் பொறுப்பார் சொல்க" என்றார்.

அண்டப்பரப்பினைக் கண்டோர் நொடிவரும் ஆய்ந்த பச்சைக்
கொண்டற் சிறைப்பெரு மாமயி லோன்குகன் எங்கள் ஐயன்
தண்டைத் திருப்பதம் போரூரில்வானவர் தம்முடிமேல்
தொண்டுற்ற பேர்முடி மேல்மறை மேலென்றுந் தோன்றிடுமே. 67

### கருத்துரை

உலகம் முழுவதையும் கண்டு ஒரு நொடிப் பொழுதில் ஓடிவருபவனும், ஆராய்ந்த பசுமையான மேகம் போன்ற நிறம் பொருந்திய சிறகையுடைய பெருமை வாய்ந்த மயிலை ஊர்தியாக உடையவனும் மனமாகிய குகையில் உள்ளவனும், எங்கள் தலைவனும் ஆகிய கந்தப்

பெருமானது தண்டையணிந்த திருவடியானது திருப்போரூரில் உள்ள தேவர்களது முடிமேலும், தொண்டு செய்த அடியார்களது முடி மேலும், வேதங்களின் முடிமேலும், என்றும் தோன்றி திருவருள் புரியும் என்க.

**அரும்பதவுரை**

அண்டம் – உலகம். ஐயன் – தலைவன். திருப்பதம் – திருவடி. வானவர் – தேவர். மறை – வேதம்.

**விளக்கவுரை**

தேவர்களது துன்பத்தைப் போக்கியருளியதால் "வானவர் தம் முடிமேல்" என்றார். தொண்டு செய்யும் அடியார்களது பிறவியை நீக்குதலால் " தொண்டுற்ற பேர் முடிமேல்"என்றார். வேதங்களின் பொருளாக விளங்குதலால் "மறைமேல்"என்றார்.

தரைபகச் சீத்துத் திசையதி ரச்சிறை தான்புடைத்தே
எரிநிறச் சென்னி நிமிர்த்து வளைத்தெண் புலிநகவாய்
வரைவுறத் தோன்றத் திறந்தூழி மேக மெனத்தொனிக்கும்
பொருகொடிச் சேவலன் போரூர னாரினும் புண்ணியனே. 68

**கருத்துரை**

நிலம் பிளக்குமாறு தனது கால்களால் கிளறவும், எட்டு திசைகளும் அதிருமாறு தனது சிறகினையடித்து தீப்போன்ற செந்நிறம் வாய்ந்த தலையை நிமிர்த்தி வளைந்து யாவரும் அஞ்சுமாறு புலிநகத்தைப் போன்ற தனது வாயை விரைவாகத் திறந்து ஊழிக்காலத்து மேகம் போன்ற இடிமுழக்கம் ஆகிய பேரொலியை உடையவனும் யாவரோடும் போர் செய்யும் இயற்கையுடையதுமாகிய சேவற் கொடியை உடையவனும், திருப்போரூரில் எழுந்தருளியவனுமாகிய கந்தக் கடவுள் பேரருள் உடையவனாதலின் தூய வடிவினனாகவும் உள்ளான் என்க.

**அரும்பதவுரை**

சீத்து – காலால் கிளறுதல். எரிநிறச்சென்னி – தீப்போன்ற செந்நிறம் வாய்ந்த தலை. புலிநகவாய் – புலிநகத்தைப் போன்ற வாய்.

**விளக்கவுரை**

சீத்து, புடைத்து, நிமிர்ந்து, விரைவுற, தொனிக்கும் சேவலங்கொடியோன் என்க – காலால் தரையைக் கிளறுதலும், தன்சிறகினை அடித்துக்கொள்ள தன் தலையை நிமிர்ந்து வளைத்தலும், புலிநகம் போன்ற தனது வாயினால் "கொக்கறுகோ" எனக்கூவுதலும், இடிமுழக்கம் போன்ற குரலும் உடையது. சேவல் என்க.

கொடியே சேவல் ஆதலின் "பொருகொடிச் சேவலன்" என்கிறார் நூலாசிரியர். பேரருள் உடையவன் ஆதலின் "புண்ணியனே" என்றார்.

நதிபிறை கொன்றை செறிசென்னி மூன்றுகண் நான்குபுயந்
துதியிரு தாள்நிகர் மாணிக்க வெற்பைத் தொடர்ந்துபடர்
கதிதரு பச்சைக் கொடிதோன்றும் இன்பக் கனிஅளகை
அதிவளம் மேவிய போரூரில் வந்தெமையாட் கொண்டதே 69

**கருத்துரை**

கங்கை நதியையும், பிறைச்சந்திரனையும், கொன்றை மாலை அணிந்த சடைமுடியையும், மூன்று திருக்கண்களையும், நான்கு திருக்கைகளும், யாவரும் போற்றும் இரண்டு திருவடிகளையும் உடைய மாணிக்க மலையைப் போன்று தோன்றி விளங்கா நிற்கும் – அம்மலையே தொடர்ந்து படர்ந்து அடியவர்கட்கு வீடு பேற்றைத்தரும் பசுமையான மரகதக் கொடியில் பழுத்த இன்பக் கனியானது குபேரன் வாழும் அளகாபுரியிலும், மிகுந்த வளம் பொருந்திய திருப்போரூரில் கந்தப் பெருமானாக எம்மை அடிமை கொண்டான் என்க.

**அரும்பதவுரை**

வெற்பு – மலை. பச்சைக்கொடி – மரகதக்கொடி. இன்பக்கனி – முருகன். அதிவளம் – பெருவளம். மேவிய –பொருந்திய.

**விளக்கவுரை**

ஐம்முகச் சிவமே ஆறுமுகச் சிவம் என்பார். பாம்பன் அடிகளார் மாணிக்க மலையே தொடர்ந்து படர்ந்து பச்சைக் கொடி (மரகதக்

கொடி) யாகத் தோன்றிய இன்பக் கனியாக முருகன் தோன்றினான். மாணிக்க வெற்பு – சிவன். பச்சைக்கொடி – திருப்போரூர் இன்பக்கனி – முருகன். திருப்போரூர் அளகாபுரியினும் மேம்பட்டது என்பதனை "அளகை அதிவளம் மேவிய போரூர்" என்றார். நதி, பிறை, கொன்றை, முக்கண், நான்குபுயம், இருதாள் என்றதால் சிவபெருமானை உணர்த்துகின்றது.

நன்மை நினைத்துன் திருவடி சேர நயக்குமென்னைப்
புன்மைநினைத் துளங்கொண்டேக நொந்தனன் பொய்மையினேன்
மும்மை யழிக்குறும் இன்பன்நம் போரி முருகப்பிரான்
செம்மை யளிக்கும் நினைவினி வேண்டுஞ் சிறியனுக்கே. 70

## கருத்துரை

வீடுபேற்றினை அடையக்கருதி உன்திருவடி அடைய விரும்பும் எம்மை – இழிந்த விடயங்களைக் கருதி மனம் கொண்டு செல்ல பொய்யடிவனாகிய அடியேன் உள்ளம் வருந்தினேன். மும்மலங்களை நீக்கி ஆன்மாக்கட்கு அருள்புரியும் பேரின்பவடிவானவனே. திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக் கடவுளே. சிறியேனாகிய எனக்கு செம்மை நலம் அளித்து திருவருள் வழிச்செல்லும் நினைவு இனி தொடர்ந்து அளித்தல் வேண்டும்.

## அரும்பதவுரை

நயக்கும் – விரும்பும், ஏக – செல்ல. நொந்தனன் – வருந்தினேன். மும்மை – மும்மலங்கள்

## விளக்கவுரை

தீயவழியில் மனம் செல்வதால் வருந்தினேன். பொய்ம்மையினேன் என்பதை "உளம் கொண்டேக நொந்தனன். பொய்ம்மையினேன்" என்றார். மும்மலங்களையும் நீக்கும் பேரின்பத்தை அளிப்பவர் ஆதலின் "மும்மையழிக்கும் இன்பம்" என்றார். செம்மைநலம் அளிக்கும் சிந்தை வேண்டும் என்பார் "நினைவு இனி வேண்டும்" என்றார்.

அவுணக் கருங்கடல் செங்கட லாக்கு மணிநெடுவேற்
சிவனுற்ற தோட்கிரிச் சேவகன் தன்னைச் செழுங் கொடியக்காற்
கவணுற்ற கைக்குற மானைத் திருடிய கள்வன் தன்னைக்
குவடுற்ற சாரலம் போரியி லேகண்டு கொண்டனனே. 71

**கருத்துரை**

அசுரராகிய கருமை நிறம் பொருந்திய கடலைச் சிவந்த கடலாக்கிய, அழகிய நெடியவேல் பொருந்திய மலை போன்ற தோள்களையுடைய மேலான வீரனை, செம்மையான கொடி போன்ற திருவடிகளையும் கவண்கல்லை ஏந்திய திருக்கைகளையும் உடைய வள்ளிப்பிராட்டியைக் களவு மணம் புரிந்து, மனம் விரும்பும் கள்வனாகத் திகழும் கந்தப்பெருமானை, பிரணவ மலையைச் சார்ந்த மலைச்சாரலின் உள்ள அழகிய திருப்போரூரில் கண்டு யான் தொழுது வணங்கி நின்றேன்.

**அரும்பதவுரை**

அவுணர் – அசுரர். சிவனுற்ற தோள் – மலை போன்ற தோள். கவண்உற்றகை – கவண்கல்லை ஏந்திய கை. குறமான் – வள்ளி. கள்வன் – உள்ளங்கவர் கள்வன். குவடு – மலை

**விளக்கவுரை**

அசுரர்களாகிய கருங்கடலைச் செங்கடலாக்கிய பெருமை வேலுக்கு. ஆதலின் "மணி நெடுவேல்" என்றார். வள்ளியை உள்ளிய வளர். அருள் வள்ளலாதலின் "குறமானைத் திருடிய கள்வன்" என்றார்.

கோலக் கருங்குயி லேமயி லேயென்று கொஞ்சுமலை
வாலைப் பருவமின் தந்தருள் ஆனந்த மாமுகிலைச்
சோலைப் புயல்மலர்த் தேன்பொழி போரிச் சுராதிபனை
மாலைக் கடந்த மனத்திற்கண் டார்க்குண்டு வாழ்வுகளே 72

**கருத்துரை**

அழகிய கருமையான குயிலே, மயிலே என்று சிவபெருமான் கொஞ்சும் இமயமலையில், வாலைப் பருவமாகிய இளமைக்காலத்து

மின்னல்போன்ற உமையம்மை பெற்ற பேரின்ப மழை பொழியும் பெருமை வாய்ந்த மேகங்கள், சோலையில் உள்ள மலர்களில் உள்ள தேனை மழைபோலச் சொரியும், திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் தேவர்கள் தலைவனான கந்தக்கடவுளை வணங்குபவர்கட்கு மயக்கத்தைக் கடந்த தமது மனத்தில் காண்பவர்கட்கு நல்வாழ்வு அமையும் என்க.

**அரும்பதவுரை**

கோலம் – அழகு. வாலை – இளமைப்பருவம். முகில் – மேகம். புயல் – மழை. சுராதிபன் – தேவர்கள் தலைவன். மாலை – மயக்கம்.

**விளக்கவுரை**

உமையம்மை என்றும் இளமையாதலால் "வாலைப்பருவம்" என்றார். முகில் மின்னலைத் தருதல் போல் அல்லாமல் உமையம்மையாகிய மின்னல் பெற்ற முகிலாதலால் "மின் தந்த மாமுகில்" என்றார். பாச மயக்கம் நீங்கியவர்க்கே மனத்தினால் காண இயலும். ஆதலின் "மாலைக் கடந்த மனத்திற் கண்டார்" என்றார்.

நீரிற் கயலெனக் கண்ணீர் துலங்கிநெஞ் சைக்கவற்று
நாரிச் சமனையும் நம்புவ ரோநல னேகொடுக்கும்
போரிப் புதியெங் குமரேசன் தாட்கன்பு பூண்டுநித்தஞ்
சீரிற் பெரிய கதிமேவி இன்பஞ் செறிபவரே. 73

**கருத்துரை**

அடியவர்கட்கு நன்மை தந்தருளும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள கந்தக்கடவுள் திருவடிகட்கு நாளும் அன்பு பூண்டொழுகி, சிறப்பில் மேம்பட்ட பெருமையுடைய நற்கதியடைந்து, சீவன் முத்தர்களாகி பேரின்ப சுகத்தில் திளைக்கும் அடியவர்கள், நீரில் வாழும் மீன்போலக் கண்களால் ஆடவர்களின் மனத்தைக் கவரும் பெண்களாகிய எமனையும் ஒருபொருட்டாக நம்பி வாழ மாட்டார்கள்.

**அரும்பதவுரை**

கயல் – மீன். துலங்கி – விளங்கி. கவற்று – கவர்தல். நாரிச்சமன் – பெண்களாகிய எமன். தாள் – திருவடி. பூண்டு – ஒழுகுதல். நித்தம் – நாள்தோறும். கதி – வீடுபேறு.

**விளக்கவுரை**

மெய்யறிவு பெற்ற மெய்ஞ்ஞானிகள் (அ) சீவன்முத்தர்கள் பெண்களை ஒரு பொருளாக மதியார். ஆதலின் "நாரிச்சமனையும் நம்புவரோ" என்றார். முருகன் திருவடிகட்கு நாளும் அன்பு பூண்டொழுகும் அடியவர்கள் சீவன் முத்தர்கள். ஆதலின் "சீரிற் பெரியகதி மேவா" என்றார்.

சூரன் கிளைகளைந் தெண்ணிலி தேவர் துயர்களைந்து
வீரஞ் சிறந்த நவவீரர் முன்னவன் வேலையில்மேய்ந்
தாரம் புயல்துயில் போரூர் முருகன் அருளெனக்குச்
சீருங் குணமும் மருவுந் தவமும்நற் செல்வமுமே. 74

**கருத்துரை**

சூரபத்மனுடைய உறவினர்களைக் களைந்து, எண்ணற்ற தேவர்களது துன்பத்தைக் களைந்து, வீரத்தால் சிறந்த ஒன்பது வீரர்கட்கு முன்னேறும் கடலில் நீரை முகந்து, சந்தனமரங்களில் உறங்கும் மேகங்கள் திகழும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள கந்தக் கடவுளின் திருவருள் சிறப்பு, குணம், தவம், செல்வம் ஆகியவற்றை எமக்குத் தந்தான் என்க.

**அரும்பதவுரை**

கிளை – சுற்றம். நவவீரர் முன்னவன் – நவவீரர்களுக்கு முன்னே தோன்றிய முருகன். வேலை – கடல். மேய்ந்து – நீரை முகந்து. புயல் – மேகம். துயில் – உறக்கம். ஆரம் – சந்தனமரம்

**விளக்கவுரை**

சூரனது கிளை களைதல் மறக்கருணையாம். தேவர்களது துன்பத்தைக் களைதல் அறக்கருணையாம். முருகன் திருவருள் சிறப்பும், சார்ந்த குணமும், புகழும், மறுமையில் நுகர்தற் கேதுவாகிய தவமும், போக நுகர்தற் கேதுவாகிய நல்ல செல்வமும் வாய்க்கும் மென்பார். "அருள் எனக்குச் சீருங்குணமு மருவுந்தவமும் நற்செல்வமுமே" என்றார்.

இருகோட் டொருமதி சூடும் பிரான்மகிழ்ந் தின்புறவே
திருகோட்டு போதம் உரைசெய்த தேசிகன் செங்குழையாற்
குருகோட்டி மாதர் விளையாடும் போரிகைக் கூப்பினரைப்
பொருகாட் டெருமையன் கண்டாலும் அஞ்சிப்புறஞ் செல்லுமே. 75

**கருத்துரை**

இரு கொம்புகளையுடைய ஓர் இளம்பிறையை அணிந்த சிவபெருமானும் மகிழ்ந்து இன்பம் அடைய, மாறுபாட்டினை அழிக்கும் பிரணவத்தின் உட்பொருளை அருள் செய்த சுவாமிநாதனாகிய ஆசாரியனது சிவந்த மாணிக்கக் கற்களினால் அமைந்த குண்டலம் என்னும் காதணிகளால் பறவையை ஒட்டிப் பெண்கள் விளையாடும் திருப்போரூர் என்னும் ஊரில் திசை நோக்கி கை கூப்பி வணங்கும் அடியார்களை, போர்க்குணம் கொண்ட கொம்பினையுடைய எருமையை ஊர்தியாக உடைய இயமன் பார்த்தாலும் அஞ்சிப் புறங்கொடுப்பான் என்க.

**அரும்பதவுரை**

இருகோட்டொருமதி – இளம்பிறை. பிரான் – தலைவன். குருகு – பறவை. திருகு – மாறுபாடு. போதம் – மெய்ப்பொருள். தேசிகன் – ஆசாரியன், சுவாமிநாதன். பொருகோடு – போர்க்குணம் கொண்ட கொம்பு.

**விளக்கவுரை**

சிவபெருமான் மகிழுமாறு பிரணவத்தின் பொருளை உணரச் செய்த காரணத்தால் முருகனை "தேசிகன்" என்றார். நான்முகன் கூறிய கருத்துக்கு மாறுபாடு. ஆதலின் "திருகோட்டுப் போதம்" என்றார். சிவபெருமானை "பிரான்" என்றும் முருகப் பெருமானை "தேசிகன்" என்றும் கூறிய கருத்து மகிழத்தக்கது.

ஆரணன் நாரணன் இன்னமுங் காண்டற் கரியபரி
பூரணந் தோன்றிய பூரண னேதிருப் போரியில்வாழ்
காரண னேஒரு நாள்நீ அளித்த கரையில்சுக
பாரணம் என்றருள் வாய்கடை யேற்கெம் பரம்பொருளே. 76

**கருத்துரை**

நான்முகனும் திருமாலும் இன்னமும் அடிமுடி தேடி காண்டற்கரிய முழுமுதற்பொருளாகிய சிவத்தில் தோன்றிய முழுமதியே. திருப்போரூரில் வாழ்பவனே. அனைத்திற்கும் காரணமாய் உள்ளவனே. மேலான பொருளே. அன்றொருநாள் நீ வெளிப்பட்டு அருளிய அளவிறந்த பேரின்பக் கடலில் கடையேனுக்கும் அருள் செய்வாயாக.

**அரும்பதவுரை**

ஆரணன் – நான்முகன். நாரணன் – நாராயணன். பரிபூரணன் – முழுமுதற்பொருள். காரணனே – காரியங்கட்கெல்லாம் காரணமாக உள்ளவனே. சுகாபரணம் – பேரின்பக் கடல். கரையில் – அளவில்லாத

**விளக்கவுரை**

நான்முகனும் திருமாலும் காண்டற்கரிய சோதி என்பார். "இன்னமும்" என்றார். கல்வியாலும் செல்வத்தாலும் காணவியலாது என்பது குறிப்பு. அன்பினால் இந்திரன் முதலானோர் தம் வாழ்வு அசுரர்களால் வீட்சியடைந்ததால் வருந்திய தேவர்கட்கு "ஒரு திரு திருமுருகன்" உதித்தனன். இதனையே "பரிபூரணன் தோன்றிய பூரணனே" என்றார்.

மெய்வேடம் பூண்டவர்க் குள்ளும் புறனும் விளங்கும் பிரான்

பொய்வேடம் பூண்டனன் என்றாலுங் காத்தனை பூங்கணையால்
எய்வேட னால்வருந் தாதெனையாளினி யேய்ந்ததினை
கொய்வேட மானை மணந்தோய்தென் போரிக் குணக்கொண்டலே. 77

**கருத்துரை**

சிவவேடம் அணிந்த மெய்யடியார்கட்கு அகத்தேயும், புறத்தேயும் விளங்கும் தலைவனே, முற்றிய தினைக்கதிரைப் பறிக்கும் வேடுவ குலத்தில் பிறந்த வள்ளிப்பிராட்டியை மணந்து அருளியவனே. தென்திசையில் உள்ள திருப்போரூர் சத்துவ குணமலையாக எழுந்தருளியிருப்பவனே. மெய்யடியார் போல அடியேன் பொய்வேடம் கொண்டவன். ஆயினும் மலர்க்கணையால்

வருத்தும் மன்மனது சிற்றின்பத்தில் வருந்தாது எம்மைக் காத்து அருளினாய். எம்மை அடிமை கொண்டு ஆட்கொள்வாயாக !

**அரும்பதவுரை**

உள்ளும் புறனும் – அகத்தேயும் புறத்தேயும், பூங்கணை – மலர்க்கணை. எய்வேடன் – மன்மதன். வேடமான் – வேடுவர் குலத்தில் தோன்றிய வள்ளிப்பிராட்டி. குணக்கொண்டல் – சத்துவ குண மலை.

**விளக்கவுரை**

மெய்வேடம் பூண்டவர்க்கு அகத்தேயும், புறத்தேயும் இறைவன் இருப்பான். பொய்வேடம் கொண்டவர்க்கு அகத்தேயும் மட்டுமல்ல புறத்தேயும் தோன்ற மாட்டான். எனினும் எம்மைக் காத்தனை என்றார். "என்றாலும்" எனும் உம்மை இழிவு சிறப்பும்மை. எய்வேடன் – மன்மதன். வேள் + தனால் = வேடனால், எனவும் மன்மதன் எனவும் பொருள் காண்க.

அருண கிரிப்பெயர் மெய்ஞ்ஞான நாதன்சொல் லால்வனைந்த
பொருதை நதிக்கிரி யான்புகழ் மாலை புனைபுயனே
கருணை மிகுத்தென்னை ஆண்டாய்க்கும் ஈண்டுகைம் மாறுளதோ
தருண வளத்தின னேசம ராபுரிச் சண்முகனே. 78

**கருத்துரை**

அருணகிரிநாதன் என்னும் திருப்பெயரையுடைய அகத்திய மாமுனிவர் சிவஞானம் பெற்று தாமிரவருணி என்னும் நதி தோன்றும் பொதிகை மலையில் வாழ்ந்து அரிய சொற்களால் பாமாலை புனைந்து வழிபடும் அழகிய திருத்தோள்களை உடையவனே. என்றும் இளமையாய் இருப்பவனே. நல்ல வளப்பத்தினையுடைய சமராபுரியில் வாழும் சண்முகப் பெருமானே. எம்பால் கருணை மழை பொழிந்து அடிமை கொண்ட உமக்கு அடியேன் இவ்வுலகில் செய்யும் கைம்மாறு ஏதும் இல்லை.

**அரும்பதவுரை**

மெய்ஞ்ஞானம் – சிவஞானம். புனைபுயன் – அழகிய திருத்தோள்களை உடையவனே. கைம்மாறு – எதிர்உதவி. தருண – இளமை. உளதோ? எதிர்மறை வினா.

**விளக்கவுரை**

அருணகிரி நாதர் பாடிய பாடல்களில் நூலாசிரியர் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். "கந்தர் அலங்காரம்" போன்றே, தாம் இந்நூலுக்கு "அலங்காரம்" எனப் பெயரிட்டார் என்க. அகத்தியரே அருணகிரியாக வந்து அவதரித்தார் என்பது கருத்து. ஆதலால் அகத்தியரை" பொருநை நதிக்கிரியான் புகழ்மாலை" என்றார். என்றும் இளமையாய் அழகியாய் ஏரூர்ந்தாய் என்பதனை "தருண வளத்தினனே" என்றார்.

மாலோன் விருந்தையை யுண்டாக்கிக் கொண்டிலன் மாமலரோன்
மேலான நன்சிரம் ஒன்றாக்கிக் கொண்டிலன் மீதுயர்ந்த
நாலா மறைபுகழ் போரூரன் சம்பந்த நாமங் கொண்டே
நூலாம் இடைமயி லாக்கினன் என்பை நொடியினிலே. 79

**கருத்துரை**

எல்லா நூல்களுக்கும் மேலான உயர்ந்த நான்மறைகள் புகழும் திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக் கடவுள். திருஞானசம்பந்தர் என்னும் திருப்பெயரைக் கொண்டு, எலும்பினை ஒரு நொடிப்பொழுதில் நூல்போன்ற இடையினை உடைய ஒரு பெண்ணாகச்செய்தனன். திருமால் தான் விரும்பிய "பிருந்தை"என்பவளது எலும்பைப் பெண்ணுருவாக ஆக்கிக் கொள்ள இயலவில்லை. பெருமை பொருந்திய தாமரை மலரில் வசிக்கும் நான்முகன் தான் இழந்த மேலான தலையொன்றினை உண்டாக்கிக் கொள்ள இயலவில்லை என்பதாம்.

**அரும்பதவுரை**

விருந்தை – பிருந்தை. திருமால் விரும்பிய பெண். மாமலரோன் – நான்முகன். நாலாமறை – நான்மறை வேதம். மயிலாக்கினன் – மயில்போன்ற அழகிய பெண்ணாக ஆக்கினன்.

**விளக்கவுரை**

எலும்பு பெண்ணுருவாக்கிய வரலாறு திருமயிலாப்பூரில் முருகனே திருஞான சம்பந்தராக அவதரித்தார் என்பதை "போரூரன் சம்பந்த நாமங் கொண்டே" என்றார். திருமால் தாம் விரும்பிய

பிருந்தை என்பவள் தீயில் விழுந்து இறந்த பின்பு அவ்வெலும்பை மீண்டும் பெண்ணாக்க இயலவில்லை. நான்முகன் தான் இழந்த தலையை மீண்டும் உருவாக்கிக் கொள்ள இயலவில்லை என்ற வரலாற்றினைக் கற்றுணர்க.

சகல மதங்களை யெல்லாம் உணர்ந்த தவமுனிவோர்
புகலும் இலக்கம்எண் ணாயிரம் பேரைப் பொருகழுவில்
இகலுற வைத்தும் வரும்ஏத மொன்றின்றி யேயிருந்தான்
திகழுறும் போரியன் சம்பந்த நாமஞ் சிறந்துகொண்டே. 80

### கருத்துரை

திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக் கடவுள் திருஞானசம்பந்தன் என்னும் திருப்பெயரைக் கொண்டு தோன்றினான். அனைத்து சமய நூல்களையெல்லாம் நன்குணர்ந்த தவத்தினை உடைய முனிவர்கள் எடுத்துக்கூறும் எண்ணாயிரம் சமண முனிவர்களை, வருத்தத்தை உண்டாக்கும் கழுவில் பகைமை கெட ஏற்றியும், தனக்கு எத்தகைய குறையுமில்லாது இருந்தனன் என்க.

### அரும்பதவுரை

புகலும் – கூறும். இகல் – மாறுபாடு. ஏதம் – குற்றம். நாமம் – பெயர்

### விளக்கவுரை

தீமை புரிந்த சமணர்களைக் கழுவேறச் செய்தது மன்னன் அறம். மன்னன் அறத்தினை தடுத்தல் ஞானிகட்குக் கடன் அன்று. பெரும் பாவஞ் செய்த சமணர் கழுவேறியது முறையே. ஆதலின் பேரருளாளர் ஆகிய திருஞானசம்பந்தர் “ஏதம் ஒன்று இன்றி இருந்தான்” என்றார். “தன்வாதில் அழிந்தோமாகிப் வெங்கழுவேற்றுவான் இவ்வேந்தனே” என்று சொன்னவர் சமணர். ஆதலின் மன்னவன் “கழுவேற்றி முறை செய்க” என்றார் சேக்கிழார்.

எண்ணற் கரிய சமணக் களைகளைந் தேதமிலாத்
தண்ணுற்ற பேரருள் நீர்பாய்ச்சிச் சைவப் பயிர்வளர்த்து
நண்ணச் சிவானந்த போகம் விளைவிக்கும் நல்உழவன்
விண்ணுற்ற தேவருஞ் சூழ்போரி வாழ்கின்ற வேலவனே. 81

**கருத்துரை**

விண்ணுலகில் உள்ள தேவர்கள் வலம் வரும் திருப்போரூரில் வாழ்கின்ற வேலேந்திய கந்தக் கடவுள் எண்ணற்ற சமணர்களாகிய களையைக் களைந்து, குற்றமில்லாத குளிர்ந்த பெருமையாகிய திருவருள் என்னும் நீரைப் பாய்ச்சி சைவமாகிய பசுமையான பயிரை வளர்த்து நிலைபெறச் சிவானந்தமாகிய நெற்பயிரை விளைவிக்கும் நல்உழவனாகத் திகழ்கிறான் என்க.

**அரும்பதவுரை**

ஏதம் – குற்றம். தண் – குளிர்ச்சி, நண்ண – நிலையான. சிவானந்தம் – பேரின்பம். போகம் – நெற்பயிர்.

**விளக்கவுரை**

திருஞானசம்பந்தர் காலத்தில் சமணர்கள் அளவிறந்து காணப்பட்டனர். ஆதலின் "எண்ணற்கரிய சமணர்" என்றார். சைவப்பயிருக்கு இடையூறு செய்தமையால் "களை" என்றார். திருவருள் என்னும் நீரைப் பாய்ச்சினார். "சிவானந்தம்" என்னும் நற்பயிரை வளர்த்தார். ஆதலின் திருஞானசம்பந்தரை "நல் உழவன்" என்றார்.

தாருகன் கோளரி மாமுகன் கொக்கின் தனது பெயர்க்
காருறு மால்வரை சூதம்வெஞ் சூரகங் காய்ந்தவைவேல்
பேருறு வோர் தமைக் காலனுந் தீண்டப் பெறான்எனிலே
போரியென் நாயகன் தாட்கே சரணம் புகுநெஞ்சமே. 82

**கருத்துரை**

தாருகனாகவும், சிங்கமுகனாகவும், கொக்கு என்னும் பெயர் வாய்ந்த பெரியபறவை வடிவாகவும், முகில் தவழும் பெரிய மலையாகவும், மாமரவடிவாகவும், மாயையால் வடிவங் கொண்டு செய்த

போருக்கு வந்த கொடிய சூரபத்மனது மார்பைப் பிளந்த வேலின் திருப்பெயரை தமது திருப்பெயர்களாகக் கொண்டவர்களையும், இயமனும் தீண்டப்பெறான். ஆதலால் திருப்போரூரில் எழுந்தருளிய தலைவனாம் கந்தக்கடவுளது திருவடிக்கு மனமே அடைக்கலமாகப் புகுவாய் என்க.

**அரும்பதவுரை**

கோளரி – சிங்கமுகன். வரை – மலை. சூதம் – மாமரம். காலன் – இயமன். தாள் – திருவடி. சரணம் – அடைக்கலம்.

**விளக்கவுரை**

சரணமடைந்தால் பிறவிப்பிணியைப் போக்கிக் கொள்ளலாம் என்பது கருத்து. வேலினை திருப்பெயராகக் கொண்ட அடியார்களைக் காலனும், நெருங்க அஞ்சுவான். ஆதலின் "காலனும் தீண்டப்பெறான்" என்றார். வேலாயுதன் வேல்முருகன், கதிர்வேலன் எனும் திருப்பெயர்களைக் காண்க.

ஆருயிர் யாவைக்கும் ஆனந்தத் தேனை யளிக்குமுக்கண்
தாருவி னாற்கவி மாமழை யேபொழி தண்முகிலே
காரிருள் மாமலந் தீர்த்தெனை யாளக் கடனுனக்கே
சீறுரு தேசிக னேபோரி மாநகர்ச் சிற்பரனே. 83

**கருத்துரை**

எல்லா உயிர்கட்கும் பேரின்பமாகிய சிவானந்தத் தேனினையளிக்கும் மூன்று கண்களையுடைய சிவபெருமானது கற்பகச் சோலையில் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்கிற நான்குவகைக் கவிகளைக் கருணை மழையாகப் பொழியும் குளிர்ச்சி பொருந்திய மேகமே. கருமை நிறம் வாய்ந்த இருளாகிய ஆணவ மலத்தினை நீக்கி எம்மையாள்வது உமக்குக் கடமையாகும். சிறப்பு வாய்ந்த ஆசாரிய தேசிகனே. திருப்போரூர் எனும் தலத்தில் எழுந்தருளிய ஞானவடிவானவனே.

**அரும்பதவுரை**

ஆருயிர் – பண்புத்தொகை. ஆனந்தத்தேன் – சிவானந்தமாகிய தேன். தாரு – கற்பகச் சோலை. காரிருள் – கருமையான நிறம் வாய்ந்த ஆணவஇருள். தேசிகன் – ஆசாரியன், குரு. சிற்பரன் – ஞானவடிவானவன்.

**விளக்கவுரை**

முருகன் திருஞானசம்பந்தராகி அவதாரம் செய்து நாற்கவிகளையும் பாடியமையால் "நாற்கவி மாமழையே பொழி தண்முகிலே" என்றார். திருப்போரூர் தலம் ஆணவ இருளைப் போக்கும் தலமாதலால் "காரிருள் மாமலம் தீர்த்தெனை" என்றார். சிவபெருமானுக்கே உபதேசம் செய்தமையால் "தேசிகன்" என்றார். பிரமமாய் நின்ற சோதி பிழம்பதோர் மேனியாதலால் "சிற்பரனே" என்றார்.

வீரத் தவுண ருயிர்களை மேய்ந்து விரைவின் அவர்
சோரிக் கடலிடை யாடிக் குடர்த்தொங்கல் சூடிவெற்றிக்
கூருற்ற வேல்கரங் கொண்டோன் தென் போரிக் குமரன் என்மேல்
சீற்ற பேரருள் வைத்தான் இஃதென் தெளிந்திலனே. 84

**கருத்துரை**

வீரம் சிறிதுமிலா அசுரர்கள் என்னும் உயிராகிய பயிர்களை மேய்ந்து விரைந்து அழித்தான். குருதிக் கடலில் மூழ்கி அவர்களது குடலாகிய மாலையைச் சூடி வெற்றி வாய்ந்த கூர்மை பொருந்திய வேலைத் திருக்கையில் கொண்டவனும், தென்பாலுள்ள திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக் கடவுள் அடியேன் மேல் சிறப்பு வாய்ந்த பேரருள் வைத்தனன். யாது காரணம் என அறிந்திலேன். தெளிந்திலேன்.

**அரும்பதவுரை**

அவுணர் – அசுரர். சோரி – குருதி, இரத்தம். தொங்கல் – மாலை. சீர் – சிறப்பு. தெளிந்திலன் – அறிவினால் தெளிவு அடைதல்.

**விளக்கவுரை**

சூரபத்மனை "சூரன்" என்றும், முருகனை " வீரன்" என்றும் கூறுதல் இயல்பு. அசுரர்களாகிய உயிர்களைப் பயிராக உருவகம்

செய்து மேய்ந்தான் என்பதனை "உயிர்களை மேய்ந்து" என்று கூறினார். வெற்றியடைந்தவர் மாலை சூடுதல் இயல்பு. ஆதலின் அவுணர்களின் குடலையே மாலையாக அணிந்தான் என்பதனை "குடர்த்தொங்கல் சூடி" என்றார். தெளிவு குருவின் திருநாமத்தைக் காண்டல், செப்பல், சிந்தித்தலால் தெளிவு பெறப்படும். ஆதலின் "தெளிந்திலேன்" என்றார்.

தேவரும் நாகரும் யாவரும் மும்முறை தெண்டனிட
மேவரும் மாமகு டத்தின் இராசிகள் மீதொளிருந்
தூவரு மாமணி ராசிகள் மேவித் தொடச்சிவந்த
பூவரு தாளினன் போரூர்க் குகனெனும் புங்கவனே. 85

**கருத்துரை**

விண்ணுலகில் உள்ள தேவர்களும், நாக உலகில் நாகர்களும் மற்றும் ஏனைய கந்தருவர்களும் மூன்று முறை கீழே விழுந்து வணங்க அவர்கள் அணிந்திருந்த மணிமுடிகளில் உள்ள தூய்மையான ஒப்பற்ற நவமணிகள் பிரதிபலித்து ஒளிவிடுவதாலும் பாதங்களைத் தொட்டு வணங்குவதாலும் பூப்போன்ற மென்மையான திருவடிகள் சிவந்து நின்றன. அத்தகையவன் திருப்போரூர் என்னும் தலத்தில் குகன் என்னும் பெயர்களை உடையவனாகச் சிறந்து விளங்குகிறான்.

**அரும்பதவுரை**

தெண்டனிட – கீழே விழுந்து வணங்க. இராசி – இராசிக்கற்கள். தூ – தூய்மை. மேவி – பொருந்தி. பூவருதாளினன் – பூப்போன்ற மென்மையான திருவடிகளை உடையவன்.

**விளக்கவுரை**

தேவர்களும், நாகர்களும், கந்தர்வர்களும் மூன்று முறை வணங்கி நின்றனர் என்பதனை "மும்முறை தெண்டனிட" என்றார். கீழே விழுந்து பாதங்களை வணங்குவதால் பூப்போன்ற மென்மையான பாதங்கள் "தொடச் சிவந்து" நின்றன என்பதாம். முருகக் கடவுள் தேவர்கட்கும் பிறருக்கும் மும்முதற் கடவுள் என்பது இதனால் கூறப்பட்டது.

கொக்கரித் தேவருந் தானவர் சேனையைக் கொன்றுழக்கி
மிக்கரத் தக்கட லாடிப் பிணமலை மீதிவர்ந்து
செக்கரில் தோன்றுங் கணநாதர் சேவிக்குஞ் சேவடியான்
இக்கரிக் குஞ்சுரும் பார்க்கின்ற போரிக் கிறையவனே. 86

**கருத்துரை**

கரும்புகளைத் துளைக்கும் வண்டுகள் ஒலிக்கின்ற திருப்போரூர் என்னும் தலத்தில் எழுந்தருளிய கந்தக் கடவுளே. ஆரவாரம் செய்து கொண்டே வரும் அசுரர்களது போர்ப்படையைக் கொன்று அதனால் பெருகியெழுந்த குருதிக்கடலில் படிந்து மூழ்கி, அவர்களுடைய பிணக்குவியலாகிய மலைமீது ஏறிச் சிவந்த வானம் போலத் தோன்றும் உருத்திரகணநாதர் வணங்கும் சிவந்த திருவடியை உடையவன் ஆவான்.

**அரும்பதவுரை**

தானவர் – அசுரர். கொக்கரித்து – ஆர்ப்பரித்து. சேனை – படை. செக்கர் – சிவந்த. கணநாதர் – கணங்கள். சேவடி – சிவந்த திருவடி. சுரும்பு – வண்டு.

**விளக்கவுரை**

குருதிக்கடல் படிந்தமையால் செக்கர் வானம் போலக் கணங்கள் தோன்றினர் என்பார் "செக்கரில் தோன்றும் கணநாதர்" என்றார். அசுரர் படையை வென்ற கணங்கள் பிணமலைமீது ஏறிய பெருவீரர். ஆதலால் கந்தனை வணங்கி நின்றனர். ஆதலால் "சேவிக்கும் சேவடியான்" என்றார்.

மணிகொண்ட சேடன் படர்முடி தூக்கி மணியுதறித்
திணிகொண்ட மால்வரை மாடே பறந்துறச் சேண்பறந்தங்
கணிகொண்ட தேவர் தொழச் சென்று மீண்டிங் ககவுமும்மைக்
குணில்கொண்ட பேரிகை யார்க்கின்றபோரிக் குகன்மயிலே 87

**கருத்துரை**

மூன்று வகைப்பட்ட முரசினை குறுந்தடியால் அடித்து எக்காலத்தும் எழும் இசையையுடைய திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக்கடவுளாகிய

முருகனது மயில் மாணிக்க மணி பொருந்திய ஆதிசேடனது ஆயிரம் தலைகளையும் குத்தித் தூக்கி அம்முடிகளில் உள்ள மாணிக்கங்களை உதறித் தள்ளியபொழுது கலங்கா நிலையில் பெருமை பொருந்திய மேரு மலையின் மீது பறந்து விண்ணுலகத்திற்குச் சென்று அவ்வுலகில் வசிக்கும் பொலிவு பெற்ற தேவர்களால் வணங்கப்பெற்று மீண்டும் இவ்வுலகத்திற்குத் திரும்பி நிற்கும் என்க.

## அரும்பதவுரை

மும்முரசு – மங்கலமுரசு, கொடைமுரசு, வெற்றிமுரசு. சேடன் – ஆதிசேடன். படர்முடி – ஆயிரம் தலைகள். சேண் – தூரம். அகவும் – மயில் ஓசை. பேரிகை – முரசு.

## விளக்கவுரை

மங்கலமும், வெற்றியும், கொடையும் என்றும் ஒலிக்கின்ற ஓசையாதலால் திருப்போரூர் "மும்மைக்குணில் கொண்ட பேரிகையார்க்கின்ற போரூர்" என்றார். மயிலுக்குப் பகை பாம்பு. ஆதிசேடனது ஆயிரம் தலைகளில் உள்ள மாணிக்கமணிகள் சிந்தின என்பதனை "படர்முடி தூக்கி மணியுதறி" என்றார்.

வாரி சுழல வடவரை யாதி வரைசுழலக்
காரொடு சந்திர சூரியர் மீன்கறங் காச்சுழலக்
கூரிருள் யாக்கை அரக்கர் சுழன்றிடக் கோதில்பச்சைத்
தேரென வட்டம் வரும்போரி வேலன் சிறைமயிலே. 88

## கருத்துரை

திருப்போரூரில் எழுந்தருளியுள்ள கந்தக் கடவுளது குற்றமற்ற அழகிய தோகையையுடைய மயில் பசுமையான தேரினைப்போல வட்டமிடும் பொழுது – ஏழுகடல்களும் சுழன்றன. மேருமலை முதலிய மலைகள் சுழன்றன. மேகமும், திங்கள், கதிரவன், விண்மீனும் காற்றாடி போல் சுழன்றன. மிகுந்த இருள்போல கருமைநிறம் பொருந்திய அசுரர்கள் சுழன்று நின்றனர் என்க.

**அரும்பதவுரை**

வாரி – கடல். வடவரை – மேருமலை. கார் – மேகம். மீன் – விண்மீன். கோதில் – குற்றமற்ற. சிறை – தோகை.

**விளக்கவுரை**

மயில் வட்டமிடும் பொழுது அதுகண்டு அஞ்சிய எழுகடல் முதலிய பொருள்களும் சுழன்றன என்பார். "கோதில் பச்சைத் தோரண வட்டம் வரும்" என்றார். இதனால் மயிலினது பேராற்றல் விளங்கும். பிரபு லிங்க லீலையில் சிவப்பிரகாசர் கற்பனை – சிவபெருமானைக் காணச்சென்றார். மயில்வாகனன் முருகன். மயிலைக்கண்டதும் சிவபெருமானின் தலை மீது இருந்த பாம்பு ஒளிந்து மறைந்தனவாம். இதனை "நாகம் நுழைவுற்று உடல் சுருண்டு, கிடந்து, நகுவெண்தலைப்புழையில் போக மெல்லத்தலைநீட்டிப் பார்க்கும் தோகைமயில் வாகனப் பெருமாள்" என்பார்.

மின்னல் சுடர்விழு தோட்டு மணிக்குழை மெல்லியலார்
பொண்ணுற்றபூண் முலைவேட்ட நெஞ்சேயிது பொய்ம்மயக்கே
தன்னைத் தலைவனை ஆராய்ந் தடையுந் தகைமையின்புக்
கென்னப்ப னாகிய போரூர்ச் செல்வேளை யிறைஞ்சுவையே 89

**கருத்துரை**

மின்னல் மின்னுதலைப்போல ஒளியை வெளிப்படுத்தும் நவமணிகளால் அமைந்த குண்டலங்களைக் காதணியாக அணிந்து பெண்களது பொன்போன்ற தேமல் பூத்த கொங்கையை விரும்பிய மனமே – முதலில் தன்னையும் பிறகு தலைவனையும் ஆராய்ந்து கண்டு அத்தலைவனை அடையும் தகுதி வாய்ந்த பேரின்பம் அடைவதற்கு எம் தந்தையாக விளங்கும் திருப்போரூரில் எழுந்தருளிய கந்தக் கடவுளை வணங்குவாயாக.

**அரும்பதவுரை**

குழை – காதணி. பொன்னுற்ற பூண்முலை – பொன்போல்படரும் தேமல். வேட்ட – விரும்பிய. தகைமை – தகுதி. தன்னையறிதல் – முப்பத்தாறு தத்துவங்களை உணர்தல்

**விளக்கவுரை**

தன்னை உணர்தலே வீடுபேற்றிற்குக் காரணமாதலின் "தன்னைத் தலைவனை ஆராய்ந்து அடையும் தகைமை" என்றார். மாதர் மயக்கம் "பொய் மயக்கமாதலின்" அதனை விரும்பிய நெஞ்சே வீடு பேறு அடையவேண்டின் "போரூர் முருகனை இறைஞ்சு" என்றார். இதுவே மெய்ம்மயக்கமாம்.

முகடிடித் துச்சக்ர வாளத்தை முட்டிவெம் மூரியெட்டுப்
பகடுகுத் திக்கனல் சிந்திடப் பார்த்துப் பரவையெல்லாம்
அகடுறத் தேக்கி விடுத்துறத் தாவி அரைக்கணம்போய்க்
ககனமுற் றும்வரும் போரூரன் ஏறங் கனதகரே. 90

**கருத்துரை**

முருகப்பெருமானது வாகனமாகிய ஆட்டுவாகனம் மேருமலையின் முடியை இடித்துச், சக்கரவாளமலையை மோதி, எண்திசைகளிலுமுள்ள கொடிய பெரிய எட்டு யானைகளையும் குத்தி, சினத்தீ பறக்குமாறு பார்த்து, ஏழுகடலையும் வயிறு நிரம்பத் தேக்கி மீளவிடுவித்து மீண்டும் தாவி, அரைக்கணப்பொழுதில் மேலே போய் உலகங்கள் எல்லாவற்றையும் வலம் வரும் என்க.

**அரும்பதவுரை**

முகடு – மேருமலை உச்சி. மூரி – வலிமை. பகடு –யானை. பரவை – கடல். அகடு – வயிறு. ககனம் – ஆகாயம். தகர் – ஆடு

**விளக்கவுரை**

நாரதர் செய்த வேள்வியில் ஆட்டுக்கடா தோன்றி உலகையே வலமாக வந்து கலக்கியது. கந்தப்பெருமான் அதனை அடக்கி தமது வாகனமாகக் கொண்டார் என்பது கந்தபுராண வரலாறு. அறியாமையே ஆட்டுக்கடா –அறியாமையை ஆறுமுகன் அடக்குகிறான் என்பது இவ்வரலாற்றின் உட்கருத்து. இதுவே முருகனுக்கு முதல் வாகனம் ஆயிற்று.

மகுடங்க ளாறுங் குழையோர் பனிரெண்டும் வானவரும்
புகழும் கடகங்கள் ஈராறும் ஆழியும் பூனதப்பொன்
திகழும் தாணியுஞ் செந்துகிர் ஆடையுஞ் செஞ்சிலம்பும்
நிகழும் படிதரித் தோர்தெய்வம் போரி நிலாவியதே. 91

**கருத்துரை**

மணி மகுடங்கள் அணிந்த திருமுடிகள் ஆறும் குண்டலங்களையணிந்த திருக்காதுகள் பன்னிரண்டும், தேவர்கள் புகழும் கடகங்கள் அணிந்த திருக்கைகள் பன்னிரண்டும், மோதிரங்களும், சாம்பூநதம் என்னும் பொன்னால் அமைந்து விளங்கும் அணிகலன்களும், சிவந்த பவளம் போன்ற செவ்வாடையும் மாணிக்கங்களால் செந்நிறம் வாய்ந்த சிலம்பணிந்த திருவடியும், ஒப்பில்லாத கந்தக் கடவுள் விளங்கும்படி திருப்போரூர் எனும் தலத்தில் திருவருளை வாரி வழங்குகின்றான்.

**அரும்பதவுரை**

மகுடம் – மணிமுடி. குழை – காதணி. வானவர் – தேவர். கடகங்கள் – கையில் அணியும் அணிகலன்கள். ஆழி – மோதிரம். பூனதம் – சாம்பூனதம் என்னும் அணிகலன். மதாணி – கழுத்தணி. துகிர் – பவளம். நிலாவியதே – விளங்கியதே.

**விளக்கவுரை**

தெய்வம் பொருளால் உயர்திணையாயினும், சொல்லால் அஃறிணையாதல் "தெய்வம் போரியில் நிலவியதே" என்றார். சாம்பூநதம் – நால்வகைப் பொன்னுள் நாவல் பழம் நிறமுடைய பொன்என்பர். இப்பாடல் கேசாதி பாதமாக வருணனை செய்யப்பட்டது. "சோமகிரணப் பெருங்கருணை" என்னும் பாடல் (திருவடிப்பற்று 4(1)) கேசாதிபாதமாக வருணனை செய்தும் அருளியுள்ளார்.

நின்பாத தாமரைக் கன்பேது மின்றிய நீசன்பொல்லேன்
புன்போத மேலிட்ட பொய்யேன் பிழையைப் பொறுத்தருளாய்
அம்போ ருகமலர் ஓரா றலர்ந்த அருட்கடலே
செம்போரி வேலவ னேஇமை யோர்கள் சிகாமணியே 92

**கருத்துரை**

ஆறுவதன தாமரைகள் மலர்ந்த அருட் கடலாகிய சரவணப் பெருமாளே – அழகிய திருப்போரூர் எனும் தலத்தில் எழுந்தருளிய கந்தக் கடவுளே – தேவர்கட்குத் தலைவனே – நினது திருவடித் தாமரைக்கு அன்பு சிறிதுமில்லாத நாயினும் கடைப்பட்டயான் மிகவும் கொடியவன் – இழிவான அறிவைக் கொண்ட பொய்ம்மை உடையவன் ஆவேன். ஆயினும் அடியேனது பிழைகளைப் பொறுத்து ஆட்கொள்வாயாக.

**அரும்பதவுரை**

பாதம் – திருவடி. நீசன் – இழிந்தவன். புன்போத – இழிவான அறிவு. பிழை – தவறு. அப்போருகம் – தாமரை. அருட்கடலே – உருவகம். இமையோர் – தேவர்கள். சிகாமணி – தலைவன்

**விளக்கவுரை**

சரவணப் பொய்கையில் ஆறு தாமரை மலரில் வீற்றிருந்தவன் கந்தன். ஆதலின் " அம்போருக மலர் ஓராறு அலர்ந்த அருட்கடலே" என்றார். "செம்போரி வேலவனே" என்பதற்கு நடுவு நிலைமையோர் வாழும் சமாரபுரி என்பர். மண்ணவர்க்கு மட்டுமின்றி விண்ணவர்க்கும் தலைவன் ஆதலின் "இமையோர்கள் சிகாமணியே" என்றார்.

செப்புக் கவித்தன்ன வன்குரத் தால்மண் சிதைத்தெறியுந்
துப்புற்ற மாவிற் கிணையாக வோதினர் சொல்கணத்தே
ஒப்பற்ற மூவுல கும்போய்த் திரும்பு மொருமனத்தை
எப்பெற்றி யாலுரைத் தார்சம புராபுரி எண்குணனே. 93

**கருத்துரை**

சமராபுரி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளிய கந்தன் எண்குணங்கள் உடையவனே. கணப்பொழுதில் ஒப்பற்ற மூன்று உலகிலும் போய் சென்று திரும்பும் மனத்தினை, செப்புக்கவித்தாற்போன்ற வலிய குளம்பால் மண்ணினைச் சிதைத்துச் செலுத்தும் வலிமை மிக்க குதிரைக்கு ஒப்பாக எக்காரணத்தினால் உவமை கூறினார்கள் சொல்வாயாக.

**அரும்பதவுரை**

வன்குரத்தால் – வலிய குளம்பால். துப்பு – வலிமை. மா – குதிரை. கணத்தே – நொடிப்பொழுதே. மூவுலகு – மனிதர், தேவர், நரகம் எனும் மூவுலகு. எண்குணங்கள் – எட்டுக்குணங்கள். (திருக்குறள் – 8, பரிமேலழகர் உரை) தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினன், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை வரம்பிலின்பமுடைமை என்பனவாம்.

**விளக்கவுரை**

விலங்குகளில் குதிரை மட்டுமே நீண்ட தூரம் வேகமாகச் செல்லும் விலங்கு – அறிவியலில் மின்சக்தியை அளவிட 'குதிரைவேகம்' என்பர். ஆதலின் மனதுக்குக் குதிரையை உவமையாகக் கூறினர் எனலாம். மனோவேகம் காற்றினும் கடுகிச் செல்லும் இயல்புடையது. மின்சாரம் செப்புக்கம்பியில் வேகமாக அச்சக்தியைக் கடத்தலும், மண்ணில் படும்பொழுது அதனைச்சிதைத்தலும் உண்டு.

மெய்யாம் நெறிக்கண் அடியேன் செலுத்த விலங்கிமிகு
பொய்யாம் நெற்றிக்கண் எனைக்கொடு போமுளப் போர்க்களிற்றை
ஐயா நினதரு ளாங்கயிற் றாற்பிணித்(து) ஆனதண்டைச்
செய்யாருந் தாட்கந்து சேர்ப்பாய்தென் போரியஞ் சேவலனே 94

**கருத்துரை**

தென்திசையில் உள்ள திருப்போரூர் எனும் தலத்தில் அழகிய சேவற்கொடியை உடைய கந்தப்பெருமானே ! நினது திருவருள் திறத்தால் மெய்ஞ்ஞான நெறியில் அடியேனை வழி நடத்திச் செலுத்தவும், அவ்வழியில் செல்லவொட்டாது விலக்கி அஞ்ஞானநெறியில் எம்மைக் கொண்டு செல்லும் மனமாகிய போர்த்தொழிலை உடைய யானையை, ஒப்பற்ற தலைவா நினது திருவருள் எனும் கயிற்றில் கட்டி, தண்டையணிந்த செந்நிறம் பொருந்திய நினது திருவடியாகி கட்டுத்தறியில் பிணிப்பாயாக !

**அரும்பதவுரை**

விலக்கி - விலங்கி. மெலித்தல் விகாரம். களிறு - யானை. பிணித்து - கட்டி. தண்டை - காலில் அணியும் அணிகலன். தாள் - திருவடி.

**விளக்கவுரை**

மனத்தை யானையாகவும், தம்மைப் பாகனாவும், திருவருளைக் கயிறாகவும், திருவடியைக் கட்டுத்தறியாகவும் உருவகம் செய்தார். ஆதலின் உருவக அணி - இறைநெறி - மெய்ந்நெறி. மனத்தின் வழியே செல்லல் பொய்ந்நெறியாம். மனத்தைத் தோணியாகவும் அப்பர் கூறினார். "மனமெனுந் தோணி பற்றி" தேவாரம்.

உள்ளுறு புல்நினை வெல்லா மொழிந்திங் குணர்வரிய
நன்னிரு ளன்னஅஞ் ஞானமுந் தீர்த்து நலனுதவுந்
தெள்ளிய பேரருளூடே கலந்தின்பு சேர்ந்திருப்பக்
கள்ளநெஞ் சேற்கும் வருமோதென் போரியஞ் காங்கெயனே. 95

**கருத்துரை**

தென்திசையில் உள்ள திருப்போரூர் எனும் தலத்தில் எழுந்தருளியுள்ள கந்தப்பெருமானே - கங்கையில் தோன்றிய காங்கேயனே - மனதில் உள்ள இழிவான எண்ணங்களையெல்லாம் விடுத்து இவ்வுலகில் உணர்தற்கரிய நடுநிசியைப் போன்ற ஆணவ இருளாகிய அறியாமையை விலக்கி வீடு பேறாகிய நன்மையைத் தந்து குற்றமற்ற நினது திருவருளாகிய பேரின்பத்தில் திளைக்க வஞ்சனைபொருந்திய மனத்தால் எனக்கு இயலுமோ? திருவருள் இருந்தால் வஞ்சனையற்ற மனத்தை அளிக்க இயலும் என்பது குறிப்பு.

**அரும்பதவுரை**

புல்நினைவு - இழிந்த நினைவு. நள்ளிருள் - நடுநிசி. அஞ்ஞானம் - அறியாமை. தெள்ளிய - தெளிந்த. கள்ள நெஞ்சம் - வஞ்சனையுடைய மனம்.

**விளக்கவுரை**

உள்ளத்தில் எழும் இழிந்த நினைவே அறிவின் எண்ணத்திற்குக் கட்டுப்பாடு இன்றி செயல்படுதலால் "கள்ள நெஞ்சு" என்றார். ஆணவ இருள் அறியாமைக்குக் காரணம். ஆதலால் "நள்ளிருள் அன்ன அஞ்ஞானம்" என்றார்.

எல்லாப் பொருள்களுந்தானாகித் தானொன்றி லேய்வதின்றாய்ச்
சொல்லாற் கருத்தத னாற்சென்று கூடருஞ் சோதியதாம்
மல்லா ரணப்பொருள் நாயேற்கும் ஈய மதித்திகொல்லோ
நல்லார்க் கினிய குகனேதென் போரிஎன் னாயகனே. 96

**கருத்துரை**

நல்லவர்கட்கு இனிய இதயமாம் குகையில் எழுந்தருளியிருப்பவனே. தென்பாலுள்ள திருப்போரூரில் எழுந்தருளிய எம் தலைவனே. உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் தானேயாகித், தான் அப்பொருள் ஒன்றிலும் பொருந்தாதவனாகி, மனம், வாக்கு, காயங்களாலும் சென்றடைதற்கரிய ஒளியாயும் நிறைந்து, வளம் நிறைந்த வேதப் பொருளை நாயினும் கடைப்பட்ட அடியேனுக்கும் தந்தருளக் கருதினையோ.

**அரும்பதவுரை**

தானாகி – ஒன்றாகி. ஒன்றில் ஏய்வது இன்றாய். வேறாகி, சொல்லால், கருத்தாற் – சொல்லும்பொருளும் என உடனாகி இருப்பவன். சோதி – ஒளி. ஆரணம் – வேதம். ஈய – தந்தருள

**விளக்கவுரை**

மெய்கண்டார் "அவன், அவள், அது" என மூவகையாகக் குறிப்பிடுவர். ஆதலின் "எல்லாப் பொருள்களும்" என்றார். மேலும் ஒன்றாய், வேறாய், உடனாகிய இருப்பவன். ஆதலின் "தானாகி, தானொன்றில் ஏய்வது இன்றாய், சொல்லால் கருத்ததனால்" என்றார். வேதம் கடந்த விமலன் வேதப்பொருளாகவும் உள்ளான். ஆதலின் "ஆரணப் பொருள்" என்றார்.

எண்ணிய எண்ணிய வாறே சிறியனுக் கீந்தருளும்
புண்ணிய னேநின் மகிமையை யோர்ந்திலன் பொய்யவனேன்
கண்ணுறு மாமணி யேகருத் தூறுங் கனிரசமே
தண்ணளி மாமுகி லேபோரி மேவிய சண்முகனே. 97

**கருத்துரை**

எண்ணியதை எண்ணியவாறே சிறியேனுக்குத் தந்தருளும் அறவடிவானவனே. கண்ணினுள் விளங்கும் கருமணியே ! எனது உளத்தில் ஊற்றெழும் முக்கனிச் சாறே ! குளிர்ச்சி பொருந்திய கருணையாகிய திருவருளைப் பொழியும் மேகமே! திருப்போரூரில் எழுந்தருளிய கந்தப்பெருமானாக விளங்கும் ஆறுமுகப் பெருமாளே. பொய்யை உடையவனாகிய யான் நினது பெருமையைச் சிறிதும் உணர்ந்திலேன்.

**அரும்பதவுரை**

ஈந்தருளும் – தந்தருளும். புண்ணியனே – அறவடிவானவனே. ஓர்ந்திலன் – ஆராய்ந்திலன். தண்ணளி – மேலான இரக்கம். மகிமை – சிறப்பை. கருத்து – உள்ளம். முகில் – மேகம்.

**விளக்கவுரை**

வேண்டத்தக்கது அறிவோய் – வேண்ட முழுவதும் தருவோய். ஆதலின் "எண்ணியவாறே சிறியேனுக் கீந்தருளும்" என்றார். "யானே பொய் என் நெஞ்சும் பொய்" என்னும் மணிவாசகரின் கூற்றுக்கேற்ப "பொய்யவனேன்" என்றார். உயிர்களின்பால் கொண்ட கருணையின் காரணமாக திருவருளைப் பொழிவதால் "தண்ணளி மா முகிலே" என்றார்.

உள்ளத் தழுக்கினை யெல்லாம் அகற்றி உனதுபத
வள்ளக் கமலத் தெழுநற வானந்த வாரியிலே
கள்ளச் சிறியனை வைத்தாள வேண்டும் கழனிமடை
அள்ளத் திறந்திடும் வாளைகள் போரி அயிலவனே. 98

**கருத்துரை**

வயலில் உள்ள மடைகளில் நீர்தேங்கி நிற்க அவற்றை வாளை மீன்கள் திறந்திடும் வயல்களையுடைய திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் வேற்படையையுடைய கந்தனே – எனது மனமாகிய உயிரில் நெல்முனைபோல் திகழும் ஆணவச் செருக்கையெல்லாம் ஒடுக்கி நினது திருவடியாகிய தாமரைத் தோணியில் ஊற்றெழும் தேனாகிய சிவானந்தக் கடலில் வஞ்சநெஞ்சினையும் சிறுமைக்குணம் உடையவனாகிய என்னை ஆட்கொள வேண்டும்.

**அரும்பதவுரை**

அழுக்கு – ஆணவம். வள்ளக்கமலம் – தாமரைத்தோணி. நறவு – தேன். வாரி – கடல். கள்ளம் – வஞ்சனை. வாளை – மீன். அயிலவனே – வேலவனே.

**விளக்கவுரை**

சிவானந்தக் கடலில் திளைக்க வேண்டுமெனில் ஆணது அழுக்கு அகலவேண்டும். ஆதலின் "உள்ளத்து அழுக்கினை" என்றார். மனம் வஞ்சனையுடையது. சிறுமைக்குணம் உடையது. ஆதலின் "கள்ளச் சிறியனை" என்றார்.

மலஞ்சோர் கடத்தைப் பிணிக்கூட்டை ஒன்பது வாயிற்பையை
நலஞ்சால எண்ணிக் கடையேன் களித்தனன் நாய்ப்புலையேன்
திலஞ்சார் தயில மெனஎங்கு மானசி வானந்தத்தேன்
கலந்தே களிப்பதென் றோசம ராபுரிக் காங்கெயனே. 99

**கருத்துரை**

சமராபுரியில் எழுந்தருளிய கந்தனே – காங்கேயனே. மும்மலங்கள் நிறைந்து விளங்கும் குடத்தினை நோய்செறிந்த கூட்டினை, ஒன்பது துளைகளையுடைய தோற்பையினை, நன்மைதரும் என மிகவும் எண்ணி நாயினும் கடைப்பட்ட அடியேன் மிகவும் பயனுள்ளதாகக் கருதி மகிழ்ச்சியடைந்தேன். நாயைப்போன்ற இழிந்த தன்மையுடையவன் ஆவேன். எள்ளில் அமைந்த நல்ல எண்ணெய் போல எங்கும் நிறைந்துள்ள சிவானந்தம் என்னும் தேனினைக் கலந்து களித்தல் எந்நாளோ? என்றார்.

## அரும்பதவுரை

மலம் – மும்மலம். பிணி – நோய். ஒன்பது வாயில் – ஒன்பது துளைகள். பை – தோற்பை. தளித்தனன் – மகிழ்ந்தனன். புலையேன் – இழிந்தவன். திலஞ்சார் தயிலம் – எள்ளிலிருக்கும் எண்ணெய் போல.

## விளக்கவுரை

இவ்வுடல் மூன்று மலங்களையும் (ஆணவம், கன்மம், மாயை) நோயாகிய கூட்டினையும், ஒன்பது வாயில்களையும் உடைய "தோற்பை" என்றார். "மலஞ்சோறு ஒன்பது வாயிற்குடிலை" என்றார் மாணிக்கவாசகரும், "மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே, ஒன்பது வாயில் ஒரு மந்திரத்தால், ஐம்புலக்கதவை அடைப்பதும் காட்டி" என்றார் ஔவையாரும்; விறகில் தீயினன்" என்பது போல மறைய நின்றுளன் மாமணிச்சோதியான் ஆதலின் "எள்ளிலிருக்கும் எண்ணெய்போல" என்றார்.

எண்ணிலி காலத்தின் பின்னரிக் காயம் இனிதளித்தாய்
நண்ணுறும் ஈதினும் மெய்ப்பத்தி யீந்திலை நாயடியேன்
பண்ணிய பாவமேன் றேகும் பரகதி என்றடைவேன்
விண்ணுற தேவருஞ் சூழ்போரி வாழ்கின்ற வேலவனே. 100

## கருத்துரை

விண்ணுலகில் உள்ள தேவர்கள் வலமாக வந்து வழிபடும் திருப்போரூரில் வாழும் வேற்படையை உடைய கந்தனே. அளவிறந்த காலத்திற்குப் பின் இம்மானிட உடலை இனிதாகக் தந்தருளினாய். கிடைத்த இம்மானிடப் பிறப்பிலும் உண்மையான அன்பு விளங்குமாறு தந்தருளவில்லை. நாயிற்கடைப்பட்டஅடியேன் செய்த தீவினை எப்பொழுதும் நீங்கும். வீடுபேறு என்பது எப்பொழுது கிடைக்கும் என்றவாறு.

## அரும்பதவுரை

காயம் – உடம்பு. ஈதினும் – இதிலும். ஈந்திலை – தந்தருளவில்லை. பண்ணியபாவம் – தீவினை ஏகும் – நீங்கும். பரகதி – வீடுபேறு.

**விளக்கவுரை**

செல்லாநின்ற இத்தாவரச் சங்கமத்துள் எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன். ஆதலின் இப்பிறவியை எமக்களித்தாய் என்பதை "எண்ணிலி காலத்தின் பின்னர் இக்காயம் இனிது அளித்தாய்" என்றார். இம்மனிதப் பிறவியிலும் உண்மையான அன்புடன் திகழவில்லை என்பதனை "மெய்ப்பத்தி ஈந்திலை" என்றார். வினை நீங்கினால் வீடுபேறு அடையலாம். ஆதலின் வினையை "ஏகும்" என்றும் வீடு பேற்றினை "அடைவேன்" என்றும் கூறினார்.

திரவணி நீடிய போரூர்கை கூப்பிச் செழுங்கமலச்
சரவண வாவியில் நீராடித் தங்கச் சதங்கை கொஞ்சுங்
குரவணி பாதம் பணிவோர்க்(கு) இனிமை கொடுக்கும்பிரான்
அரவணி வோன்கும ராஅடி யேனுன் அடைக்கலமே. 101

**கருத்துரை**

நிலைபெற்ற அழகிய நீண்ட திருப்போரூரைக் கை குவித்து அன்றலர்ந்த தாமரைகள் நிறைந்த சரவணப் பொய்கையில் நீராடிப் பொன்னால் அமைந்த சதங்கையொலிக்கும் குராமலர்களை அணிந்த திருவடியை வணங்குவோர்க்குச் சிவபோகங்கொடுத்து அருளும் பெருமானே. பாம்பையே ஆபரணமாக உடைய சிவபெருமானின் திருக்குமரனே. அடியேன் நினது திருவடியை அடைக்கலமாகக் கருதியடைந்தேன். அருள்வாயாக.

**அரும்பதவுரை**

ஸ்திரம் + அணி = திரவணி. செழுங்கமலம் – சிவந்த தாமரை. வாவி – குளம். தங்கச் சதங்கை – தங்கத்திலான சதங்கை (கொலுசு) என்னும் அணிகலன். குரவணிபாதம் – குராமலர்களால் பரவிய திருவடி. பிரான் – பிரியாதவன், தலைவன். அரவு – பாம்பு

**விளக்கவுரை**

என்றும் இளையாய் அழகிய ஏரூர்ந்தாய். ஆதலின் "தங்கச் சதங்கை கொஞ்சும் குரவணி பாதம்" என்றார். எல்லார்க்கும் மேலவன் ஆதலின் "பிரான்" என்றார். நினது திருவடியை அடைக்கலமாக அடைந்தேன்."அருள்வாயாக" என்பது குறிப்பு.

## செய்யுள் - முதற் குறிப்பு அகராதி

திருப்போரூர்ச் சந்நிதிமுறை – அலங்காரம்
ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் அருளியது

உரையாசிரியர்
புலவர். **பா.மாசிலாமணி.** எம்.ஏ.எம்.எட்.



நூல் வெளியீடு
ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் வழிபாட்டுச்சங்க கல்வி அறக்கட்டளை
13.ஏ. ஏ.எஸ்.இராஜன்நகர், புதுப்பெருங்களத்தூர். சென்னை – 600 063.
தொடர்புக்கு : **99401 92632**